

## அறிமுகப்படுத்துகிறோம்!

# புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்

## அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல, உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**நீங்கள் வேர்க்குருவைத் தடுக்க முடியும்போது அது தாக்கும்வரை ஏன் காத்திருக்க வேண்டும்?**

இப்போது, உங்கள் வேர்க்குரு பிரச்சினையைக் கட்டுப்படுத்த இன்னும் மிகத் தீவிரமான வழி— புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரண மளிப்பது மட்டுமல்ல உண்மையிலேயே அதை தடுத்திட உதவுகிறது.

**புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஏன் மிகவும் தீவிரமானது?**

உங்களுக்கு அதிகமாக வியர்த்து, அந்த வியர்வை உங்கள் சருமத்தில் அதிக நேரம் தங்கியிருக்கும்போது, வேர்க்குருவின் தாக்குதலுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். அதற்காகத்தான் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மிகவும் தீவிரமானதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சும் வண்ணம் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது அது— உங்கள் சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுக்கிறது— ஆகவே வேர்க்குரு இல்லை. எரிச்சல் இல்லை. நமைச்சல் இல்லை. அப்பாடா என்ன நிவாரணம்! அதற்கும்மேல் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், இப்போது மகிழ்ச்சிதரும் புதிய நறுமணமும்* கொண்டுள்ளது

வரும் கோடையில் வேர்க்குரு தாக்கும் வரை காத்திருக்காதீர்கள். விரைந்து வாங்கிடுங்கள் ஒரு பேக் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். வேர்க்குருவை நீங்கள் தடுக்க முடியும்போது, வேர்க்குருவால் ஏன் சிரமப்பட வேண்டும்?

விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. இது மூவழிகளில் செயல்படுகிறது.


வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சுகிறது.


சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுப்பதற்கான விசேஷ மருந்துக் கலவை கொண்டது.


சருமத்தை குளிர்ச்சியாகவும் புத்தம் புதுமையாகவும் வைத்துக் கொள்கிறது. அதன் இதமான செயல்.




*சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

Johnson & Johnson

OBM-4181 TAM

# ஆற்றல் மிக்க வாலிப வயது



—ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

இளைஞர்கள் நான்கு வகையாக இருக்கிறார்கள். கிராமங்களில் விவசாயம், கூலி வேலை செய்கிறவர்கள். நகரங்களில் தொழிற்சாலைகளில் தொழிலாளர்களாகப் பணி புரிகிறவர்கள், நன்றாகப் படித்து விட்டு உத்தியோகம் பார்க்கிறவர்கள், தவிர நாலாவதாக வெளி நாட்டுக்குப் படிக்க, சம்பாதிக்க என்று போய்விடுகிறவர்கள்.

இந் நால்வரில் மூவரை நாம் மிகவும் முக்கியமாகப் பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

கிராமப்புற இளைஞர்களுக்கு நம்முடைய கலாசாரம் பண்பாடு, நம்முடைய சமயம் இவற்றைப் பற்றியும், ஒழுக்கம் கட்டுப்பாடு இவைகளைப் பற்றியும் நிகழ்ச்சிகள் நடத்தி, அவற்றின் மூலம் தெரிவிக்க வேண்டும்.

நகரங்களில் வாழும் தொழிலாளர்களிடத்திலேயும் ஜப்பான் போன்ற நாடுகளின் பொருளாதார வளர்ச்சி பற்றி விளக்கிக் கூறியும், அங்குள்ள தொழிலாளர்களின் நிலையைப் பற்றி விளக்கிக் கூறியும் பொறுப்புள்ளவர்களாக ஆக்க வேண்டும்.

படித்து உத்தியோகத்திலிருக்கும் இளைஞர்களை நம்முடைய பாரத தேசத்தினுடைய கலாசாரத்தையும் பண்பாட்டையும் பிரதிபலிக்கும் வகையில் உடை, உணவு, வாழ்க்கை முறை இவைகளைப் பற்றியெல்லாம் தெரிந்து கொள்ளச் செய்ய வேண்டும்.

முன்பெல்லாம் குழந்தை பிராயம் முதலே நல்ல முறையில் வளர்த்ததினால் இளைஞர்களுக்கு என்று தனியாகப் பயிற்சி எதுவும் அளிக்க அவசியமில்லாமலிருந்தது.

குழந்தைகளுக்கு என்று நிறைய அற நூல்கள் இருக்கின்றன. இல்லறத்தார்களுக்கு என்று நிறைய அற நூல்கள் இருக்கின்றன. முதிர்ந்த வயதில் வாழ வேண்டிய நிலை பற்றிக் கூற நிறைய அற நூல்கள் இருக்கின்றன. ஸந்நியாசியாக இருப்பவர்கள் வாழ வேண்டிய நிலை பற்றிக் கூறும் நூல்கள் கூட இருக்கின்றன.

ஆனால் இளைஞர்களைப் பற்றி, அவர்கள் நடந்து கொள்ள வேண்டிய முறை பற்றிக் கூறும் நூல்கள் மிக அரிதாகத்தான் இருக்கின்றன.

இதற்குக் காரணம், சிறு வயதிலேயே நல்லதைப் போதித்து விட்டால் பிற்காலத்தில் இளைஞர் வயதை அவர்கள் அடையும்போது முன்பு அப்படிப் போதித்தது உறு துணையாக இருக்கும் என்ற எண்ணம்தான்.

ஆனால் தற்போதைய சூழ்நிலையில் — சில வருஷங்களாக — எந்த அற நூலாகட்டும் — யாருக்கும், படிப்பதிலோ, அதன்படி நடப்பதிலோ ஆர்வமில்லாமல் போய்விட்டது.

இந்த நிலையில், சமுதாயமே திசைமாறிச் சென்று கொண்டிருக்கிற போது, இளைஞர்கள் எந்தத் திசை நோக்கியும் செல்வதில் ஆச்சர்யம் ஏதுமில்லை.

சுதந்திரம் பெறுவதற்கு முன்னால், நம் நாட்டிலிருந்த சுதந்திர தாகம், சுதேசித் தன்மை, தேச பக்தி, தெய்வ பக்தி, நல்லொழுக்கம், பெரியோர்களிடம் மரியாதை, போன்ற குணங்களைக் கொண்டவர்கள் தான் இன்றைய முதியவர்கள். ஆகவே வாலிப வயதில் நல்ல விஷயங்களை ஏற்க முடியாது என்பதோ, தேவையில்லை என்பதோ கிடையாது.

ஒரு மனிதனின் வாழ்வில் வாலிப வயதில் தான் எல்லாவிதமான ஆற்றலும் நிறைந்து நிற்கும். அந்த ஆற்றலை நல் வழிப்படுத்துவதற்குத் தகுந்த முயற்சி இல்லாத போது, தீய வழியில் செல்லக் கூடிய சூழ்நிலை ஏற்படும் போது, இளைஞர்களின் சக்தியெல்லாம் விருதாவாகப் போவதில் ஆச்சர்யமில்லை.

அரசாங்கம், அரசியல்வாதிகள், ஸினிமா, டெலிவிஷன், விடியோ, புத்தகங்கள், தாங்கள் வாழும் பக்கச் சூழ்நிலைகள் இத்தனையும் சேர்ந்து இளைஞர்களைத் தவறான பாதைக்கு அழைத்துச் செல்லத் தயாராக இருக்கும் போது இத்தனையையும் மீறி நல்ல இளைஞர்கள் பலர் உருவாவதுதான் மிகவும் ஆச்சர்யம்! அவர்களை வாழ்த்தி ஆசி வழங்குகிறோம்.

இளைஞர் ஆண்டான இந்த ஆண்டில், எல்லாத் தரப்பு மக்களும், ஸ்தாபனங்களும், இளைஞர் சக்தியை நல்வழிப்படுத்தும் வழியில் முயல வேண்டும். இதற்குக் காத்திராமல், இளைஞர்களே, அறிவுத் திறன் இருப்பதனால், நன்கு ஆலோசித்து, நல்வழியில் நடக்க உறுதி பூண வேண்டும். இதற்குரிய மனோபலத்தை நம் இளைஞர் பெற இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

* * * * *

இந்த அருள்வாக்கை இளைஞர் சமுதாய மேம்பாட்டுக்காக ஸ்ரீ பெரியவாள் திருவாய் மலர்ந்தருளிய போது நேரம் நள்ளிரவு பன்னிரண்டு மணியைச் சற்றே கடந்திருந்தது.

—சுப்ரபாலன்

# இது இளைஞர் அணி

**உங்களுக்கு அறிமுகமான மிகச் சிறந்த இளைஞராக யாரைக் கருதுகிறீர்கள்? என்று வாசகர்களைக் கேட்டிருந்தோம்....**



### ஜெயஸ்ரீ

கோவை பி. எஸ். ஜி. கல்லூரியில் இரண்டாம் வருடம் பயோ கெமிஸ்ட்ரி படிக்கும் ஜெயஸ்ரீ பேச்சுப் போட்டிகளில் வாங்கியுள்ள சான்றிதழ்களை ஒருகட்டுக் கட்டினால் அதைத் தூக்கவே முடியாமல் கரங்கள் கெஞ்சும். ஏழாம் வகுப்பிலிருந்து இந்தச் சாதனையைப் புரிந்துவருகிறாள் ஜெயஸ்ரீ. கோவைமாவட்டத்தில் எங்கு பேச்சுப் போட்டி நடந்தாலும் ஜெயஸ்ரீ குரல் ஒலிக்கிறதே. படிப்பு பாதிக்கப்படாதா என்றால், பத்தாம் வகுப்பில் பள்ளியில் இரண்டாவது மாணவி. பிளஸ் டூவில் பள்ளியில் முதல் மாணவி என்ற பதில் கிடைக்கிறது இவர் தந்தையிடமிருந்து. முதன் முதலில் கல்லூரியில் பேசிய போது மாணவர், எழுப்பிய சத்தம், கேலியில் சற்று பயந்தாராம் ஜெயஸ்ரீ. ஆனால் இப்போதோ ஜெயஸ்ரீ என்ன பேசப் போகிறாள் என்று ஆவலுடன் காது கொடுத்துக் காத்திருக்கிறார்கள் மாணவர்கள்!

—லக்ஷ்மி நடராஜன், திருப்பூர்.



### கே. வி. ராஜன்

உடன் பிறந்தவர்கள் பதிமூன்று பேர் என்பதால் கூலி வேலைக்குச் செல்ல வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டபோது பல கடைகளுக்குக் கடலை மிட்டாய் விற்று படிப்பைத் தொடர்ந்தவர். வீடு வீடாகப் பத்திரிகைகள் போட்டு சம்பாதித்தார். பி. ஏ. படித்துத் தஞ்சை மாவட்ட மாணவர் காங்கிரஸ் செயலராகவும் விளங்கி, அரசியல் போராட்டங்களில் பங்கேற்றார். கல்லூரிகள் பல நடத்தும் நாடக, சிறுகதைப் போட்டிகளில் பரிசுகள் பல பெற்றார். பி. எல். படிக்க வைத்திருந்த பணத்தை அக்காவின் கல்யாணச் செலவுக்குத் தந்து விட்டு, எம். ஏ. சேர்ந்து, படிப்புக்குப் பண வசதிக்காகக் கடலை மிட்டாய் கம்பெனி ஆரம்பித்தார். இன்று கம்பெனியைக் கவனித்துக் கொண்டே ஒரத்தநாட்டில் ஆசிரியர் பயிற்சியும் பெறுகிறார்.

— என். சேகர், கும்பகோணம்.

## டாக்டர் அபுல்ஹாசன்



மூன்று வருஷமாக ரத்த தான வங்கியின் செயலராக இருந்து உரிய நேரத்தில் அரிய உயிர்களைக் காத்துள்ள அபுல் ஹாசன் இன்று தஞ்சை மருத்துவக்கல்லூரியில் ஹவுஸ் ஸர்ஜன். ரத்த தானத்துக்கு ஏராளமானவர்களை ஊக்குவித்ததுடன், ரத்தப் பரிசோதனைக்காகப் பல 'கேம்ப்'களை நடத்தி ஏழை மக்களுக்கு உதவியவர். இவர் மூலம் சேர்ந்த ரத்தம் 1072 பாட்டில்கள்! பகலெல்லாம் ரத்த சேமிப்புக்காக உழைத்து விட்டு இரவெல்லாம் பரீட்சைக்குப் படித்த நாட்கள் பலப்பல. தஞ்சை மருத்துவக் கல்லூரியில் முதலுதவித்திட்டத்தை அமுலுக்குக்கொண்டு வந்து பயிற்சிகள் தொடங்கக் காரணமாகி பாராட்டுப் பெற்ற இவர் தமது லட்சியம் கிராம மக்களுக்குப் பணியாற்றுவதே என்கிறார். இவர் மிகவும் போற்றி பாதுகாப்பது இவரது சேவைக்கு வாழ்த்துத் தெரிவித்து வந்த அன்னை தெரஸாவின் கடிதம். வியப்பில்லையல்லவா?

—குமாரி சித்ரா பூஸப்பன், தஞ்சை.

## ராமஸ்வாமி



தொடர்ந்து மூன்று சதம் போட்ட அசாருதீனைத் தெரியும். விரிஞ்சிபுரம் ராமஸ்வாமியைத் தெரியுமா? பொங்கலின் போது சென்னை கிரிக்கெட் டெஸ்ட்டில் பார்த்திருப்பீர்களே! அம்பயர் ராமஸ்வாமியும் ஹைதராபாத்தான். "ஹைதராபாத் ஜிந்தா பாத்" என்கிறீர்களா? தென் மத்திய ரயில்வேக்கும் ஒரு "ஜே" போடுங்கள். ராமு அங்கு ஸ்டெனோ. கருக்கெழுத்துடன் கிரிக்கெட் பைத்தியமும் பிடித்துக் கொள்ள, 14 வருஷமாக கிரிக்கெட் நீதிபதித் துறையில் கண்ணும் காதுமாக இருந்திருக்கிறார். அதற்கான பரீட்சையெல்லாம் மள மளவென்று பாஸ் செய்தார். 73ல் ரஞ்சி ட்ராஃபிக்கு தேர்வு பெற்றார். 78ல் அகில இந்திய அம்பயர் லிஸ்ட்டில் பெயர். 83ல் பரோடாவில் கிட்டிய டெஸ்ட் அம்பயர் வாய்ப்பு தொடர்கிறது. "நடுவருக்குத் தேவை?" என்று வினவினால் "கண்ணும் காதும் கூர்மையாக இருக்கணும். சரியான முடிவை பயப்படாமல் எடுக்கணும்" என்கிறார்.

— சுபஸ்ரீ, செகந்திராபாத்.

## கேசவ சேகர்



இன்றைய இளைஞர்கள் பலர் நிகோடின் புகையுடன் நிதம் விளையாடிக் கொண்டிருக்கும் போது பேனா முனையால் சாதனை சதம் படைக்கத் துடிக்கிறார் கேசவ சேகர். என்றால் பல துறைகளிலும் விளையாட முடியும் என்பதை நிரூபிப்பதே போல் கவிஞர், நாடகக் கதை—வசனகர்த்தா, டைரக்டர், பாடகர் என்று பலதுறைகளில்மிளிர்கிறார்புதுவையின் இந்தச்சகலகலா வல்லவர். பாரதிதாசனின் குருங் காவியத்தை நாடகமாக்கி பெரும் புகழ் பெற்றார் எனில் புதுவை எழுத்தாளர் சங்கத்தினரால் "கவிப் புயல்" என்று பாராட்டப் பெற்றிருக்கிறார். ஈழத் தமிழர் நிவாரண நிதிக்காக இவர் கவிதை படைத்த போது "என்னை கிளிசரின் இல்லாமல் கண்ணீர் சிந்த வைத்த முதல் ஆள் நீதாய்யா" என்று உணர்ச்சி பெருக்குடன் கூறினார் பாக்கியராஜ். புதுவைக் குரல் நிருபரான இவரது பலவிதப் படைப்புக்கள் பல பத்திரிகைகளுக்கும் பரிமாறப்பட்டுள்ளன.

— திருமதி ஜோதிதிரவியம், பாண்டிச்சேரி.

## பாரதி

தொலைக்காட்சி மூலம் தெரிந்த முகம் ஆனவர் கவிஞர் சுப்பு ஆறுமுகத்தின் இளையமகள். தந்தையின் வில்லிசையில் முதன் முதலில் பங்கேற்று பரமாசார்யாள் முன்னிலையில் ஆகம



சில்ப சதஸில் அரங்கேறியபோது வயது ஐந்து. கிள்ளை மொழியில் நெஞ்சங்களைக் கிள்ளினார். இன்று இருபது வயது. வில்லுப் பாட்டுடன் நில்லாது, முதுகலை தமிழ் இலக்கியம் (முதலாண்டு) தபால்மூலம்பயின்றுவருகிறார். பிரபலமான பலரின் பாராட்டுக்களைக் குறையின்றிப் பெற்ற பாரதி தனி இசை நிகழ்ச்சிகளும் நடத்திப்புகழ்பெற்று வருகிறார். புலவர் டாக்டர் நீசவேந்தன் ''பண்ணிசைத்தென்றல்'' என்றபட்டத்தையும்வழங்கியாயிற்று. கானபூஷணம் திருமதி பார்வதி ராமனிடம் முறைப்படி கர்நாடக சங்கீதமும், வீணையும் பயின்று வருகிறார். இவ்வளவு போதாதென்று சிறுகதைகள் எழுதி நூலாக வெளியிடவும் முயற்சி மேற்கொண்டுள்ளார்!

— ஜெயந்தி நாகராஜன், சென்னை.



## எஸ். தியாகராஜன்

இருபத்தாறு வயது நிரம்பிய இவர் அம்பத்தூரில் டயமண்ட் செய்ன் நிறுவனத்தில் நிர்வாகக் கணக்கராகப் பணி புரிகிறார். சார்ட்டர்ட் அகௌண்ட்டன்ஸி, காஸ்ட் அகௌண்ட்டன்ஸி இரண்டிலும் தேறி ஆமதாபாத்தில் எம். பி. ஏ. படித்து முடித்து கம்பெனி செக்ரட்டரி கோர்ஸிலும் தேறியுள்ளார். இவ்வாறு இந் நான்கிலும் தேறியவர்கள் இந்தியாவில் மிகக் குறைவு. அதிலும் முதல் பத்து பேர்களில் ஒருவராக விளங்குகிறார். 26 வயதுக்குள் இவற்றை முடித்தது மாபெரும் சாதனை. இவ்வளவு கனத்தைத் தலை தாங்கிய போதிலும் தலை கனம் இல்லாதவர். பழக இனிமையானவர். தமக்குக் கீழ் பணியாற்றுவோரை அன்பினால்வசப்படுத்துகிறார். கம்ப்யூட்டர்புரோக்ராமிங்கிலும் நிபுணர். பொருளாதார கட்டுரைகள் எழுதுவதும் செஸ் விளையாட்டும் பொழுது போக்கு.

— எஸ். பத்மினி, சென்னை–20



## எஸ். ஆர். சேகர்

மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் முழு நேர ஊழியர். தமிழ் மாநில சி. ஐ. டி. யு. வின் அலுவலக செயலாளர். அல்லும் பகலும் பாட்டாளிகளுக்கு அயராது உழைப்பவர். சிறு வயதிலேயே திருக்கழுக்குன்றம் பள்ளி நாட்களில் பல விளையாட்டுக்களில் வெற்றி தோல்விகளை நிர்ணயித்த சேகருக்கு இன்று வயது 25. விமானப் பொறியியல் துறையில் படிக்க இடம் கிடைத்தும் பொருளாதார சூழ்நிலை இடம் தராததால் சாதாரண காண்ட்ராக்ட் தொழிலாளியாக வாழ்க்கை தொடங்கினார். பல நிறுவனங்களில் இவர் திறமைக்காக வேலை கிடைப்பதும் தொழிலாளர் நலனுக்குப் போராடுவதால் வேலை நீக்கம் செய்யப்படுவதுமாக சில காலம் சென்றது. 79–ல் மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் முழு நேர ஊழியரானார். சொந்த வாழ்க்கையில் பல சோகங்களை சந்தித்தும் அவற்றையெல்லாம் உதறி விட்டு பாட்டாளிகளுக்கு இவர் ஆற்றும்சேவைபாராட்டுக்குரியது.

— பி. ராமமூர்த்தி. உத்திரமேரூர்.



## ப.திருமலை

தினமலர் மதுரை பதிப்பின் நிருபராக இன்று உள்ள திருமலை பொதுச் சேவை என்றாலே புயலெனப் புறப்படுவார். கல்லூரியில்படிக்கும்போது தேசிய சேவைதிட்டத்தில்மாணவர் அமைப்பாளராய் இருந்தவர். முதியோர் கல்வி, ரத்த தானம் போன்றவற்றில் ஆர்வம் காட்டினார். பி. ஏ. முடித்து வழக்குரைஞரான பிறகும் படிப்பார்வம் குறையாது அஞ்சல் வழியில் எம். ஏ. படித்து முடித்தார். சட்டக் கல்லூரியில் படிக்கும் போது ''உதயம்'' என்ற கையெழுத்துப் பத்திரிகை நடத்தினார். இப்பத்திரிகை சார்பில் இலக்கியக் கூட்டங்கள் நடைபெறும். பல இலக்கிய ஏடுகளில் இவரது கவிதைகள் இடம் பெற்றுள்ளன.

புதியது

# பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

# அதிக சுவையானது அதிக முழுமையானது

ஏற்கெனவே பால் அடங்கியது




**நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும் உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரண சக்திக்கென முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. அதிக முழுமையான திட உணவு.

உடல் நலத்தின் உறைவிடம்–கிளாக்ஸோ

---

**இலவசம்!** குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்: உங்களது பிரதியைப்பெற தபால் மற்றும் இதர செலவிற்கு ரூ. 1/— தபால்தலை உள் வைத்து எழுதுவீர் இம்முகவரிக்கு—தபால் பெட்டி எண் 19119, (FCM-21) பம்பாய் 400 025.

---

CLARION/B/GX/4/203 TAM

'சட்டம் படித்தபின் ஏன் பத்திரிகை நிருபரானீர்?' என்றால், 'எனக்கு விருப்பமான தொழிலை மேற்கொண்டேன். இப்போது தான் சந்தோஷமாக இருக்கிறேன்' என்கிறார்.

—எஸ். பாலகிருஷ்ணன், மதுரை.



**ஆர். ஸ்ரீனிவாசன்**

ஐ. ஐ. டி. யில் பி. டெக் முடித்து இப்போது அமெரிக்காவில் இருக்கும் ஆர். ஸ்ரீனிவாசன் பத்தாம் வகுப்பு படிக்கும் போதே ஒருகலியாணத்தில்வாணம்உயரத்தில்வெடிப்பதைவிஞ்ஞானக் கண்கொண்டு பார்த்து அதன் உயரத்தைத் துல்லியமாகக் கணக்கிட்டுச் சொன்னவர்! அன்றே, ''கடல் துளி பேசுகிறது'' என்ற தலைப்பில் கட்டுரை எழுதி ''ஜியாகிரஃபி'' பத்திரிகையில் பிரசுரமாயிற்று. இவ்வளவு புத்திசாலி மாணவன் பிளஸ் டூ படிக்கும் போது விஞ்ஞானத்தில் அகில இந்திய முதல் பரிசு பெற்றதில் வியப்பென்ன? படிப்பு, ஆராய்ச்சி என்றே இராமல் குதிரை ஏற்றம், நீச்சல், கார்டூன் வரைதல் ஆகியவற்றிலும் ஆர்வம் காட்டியவர் ஸ்ரீனிவாசன். இன்னொன்று—மிருதங்கம் வாசிக்கவும் தெரியும்!

— கே. ராமன், சென்னை.



**முருகையன்**

பள்ளி கல்லூரிகளில் பயில்பவர்கள், வேலை தேடிக் கொண்டிருப்பவர்கள், வேலையில் இருப்பவர்கள் என்று பல சாராரும் தேடி வருவது மயிலாடுதுறை முருகையனை. இவர் எம். ஏ. பி. ஈ டி. தபால் மூலம் எம். ஈ டி. யும் படித்து வருகிறார். ஆனாலும் தட்டச்சு சுருக்கெழுத்து பலருக்குப் போதிப்பதிலேயே மிகுந்த ஆர்வம் காட்டுகிறார். எத்தனையோ பேருக்கு ஒரு வாழ்க்கையை அமைத்துக் கொடுக்க முடிவதில் திருப்தி ஏற்படுகிறது என்கிறார். காலை ஆறு மணி முதல் இரவு எட்டு மணி வரை இவரது நிறுவனப் பணி நீடிக்கிறது. இதற்கு முன்னும் பின்னும் பொதுப்பணிகள். இதுவரையில் யாரும் செய்யாத ஒன்றை — சுருக்கெழுத்தை தபால் மூலம் போதிக்கும் புதிய முறையை ஆரம்பித்திருக்கிறார்.

— இரா. கலைச் செல்வி, மயிலாடுதுறை

---



## கல்கி நடத்திய கருத்தரங்கம்

இளைஞர் ஆண்டினையொட்டி பல்வேறு கட்சிகளின் இளைஞர் அணித் தலைவர்களை ஒன்று சேர்த்து கல்கி நடத்திய கருத்தரங்கில் கலந்து கொண்டவர்கள்:

1. மாண்புமிகு தம்பிதுரை நாடாளுமன்ற துணை சபாநாயகர்.
2. ஜே.சி.டி. பிரபாகரன் (அ.இ.அ.தி.மு.க.)
3. வி. ஆர். எஸ். சம்பத் (மாணவர் தலைவர்)
4. ரங்கராஜன் குமாரமங்கலம், M.P. (இ. காங்கிரஸ்)
5. டபிள்யூ. ஆர். வரதராஜன் (மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட்)
6. செல்வி பாரதி (சென்னைப் பல்கலைக் கழக எம். ஃபில். மாணவி)
7. மிசா. கணேசன். (தி.மு.க.)

ஜே.சி.டி. பிரபாகரன்: (அ.இ.அ.தி.மு.க.)

இளைஞர்களின் ஒளிமயமான எதிர்காலத்தை அடிப்படையாகக் கொண்டே திட்டங்கள் தீட்டப் பட வேண்டும். இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு இல்லாதது தான் இன்று மிகப் பெரிய பிரச்னை. எனவே வேலை செய்யும் உரிமை அரசியல் சட்டத்திலேயே அடிப்படை உரிமையாக்கப் பட வேண்டும். — குறைந்த பட்சம் பட்டதாரி இளைஞர்களுக்காவது கண்டிப்பாக வேலை வாய்ப்பு வசதி செய்து தரப்பட வேண்டும். மற்றொரு பூதாகரமான பிரச்னை வரதட்சணைக் கொடுமை. இந்த ஆண்டிலாவது இந்தக் கொடுமையிலிருந்து இளம் பெண்களைக் காப்பாற்ற வலுவான சட்டங்களை இயற்ற வேண்டும்.

சம்பத் (மாணவர் தலைவர்):

வேலை வாய்ப்பு என்று பார்க்கும் போது 'படித்த இளைஞர்களுக்கு', படிக்காத இளைஞர்களுக்கு என்று தனித் தனியாகப் பிரித்துச் சட்டம் போடக் கூடாது. நமது சமுதாயத்தில் இன்று படித்த இளைஞர்களை விட கிராமப்புறத்தில் படிக்காத இளைஞர்களே மிகவும் அதிகம். அவர்களையும் மனத்தில் கொண்டு திட்டங்கள் தீட்டுவது மிகவும் அவசியம். அடுத்து இளைஞர்களான மாணவர்களிடையே அரசியல் கட்சிகளின் செல்வாக்கு குறித்து யோசிப்பது நலம். கட்சிகள் மாணவர்களைப் பயன் படுத்திக் கொள்கிறதே தவிர ஊக்குவிப்பதில்லை. முன்னெல்லாம் அரசியல் மீது மாணவர்களுக்கு இருந்த ஆர்வம் இப்போது மிகக் குறைந்து விட்டது. சரியான கொள்கைகளையும், லட்சியங்களையும் கொண்டு இயங்கும் கட்சிகள் மாணவர்களிடம் விழிப்புணர்ச்சியை உண்டாக்கி எதிர் கால சமுதாயத்துக்குத் தக்கபடி அவர்களை உருவாக்க முடியும். ஆனால் அரசியல் கட்சிகள் இப்படி தொலை நோக்கோடும், பெருந்தன்மையோடும் சிந்திப்பதாகவோ, நடந்து கொள்வதாகவோ தோன்றவில்லை. அரசியல் கட்சிகளை மட்டும் சொல்வானேன்? இந்த சமுதாயத்தில் எல்லாமே கெட்டுப் போய் இருக்கிறது. அதைப் பார்த்து இளைஞனும் கெட்டுப் போகிறான். பெரியவர்கள், இளைஞர்களைச் சரியான பாதையில், லட்சியப் பிடிப்போடு வழி நடக்க ஆலோசனை கூற வேண்டும். இளைஞர் ஆண்டில், இளைஞர்களுக்கு மட்டுமல்ல;

# புதிய சமுதாயம் படைப்போம்



தம்பிதுரை



ஜே. சி. டி. பிரபாகரன்



வி. ஆர். எஸ். சம்பத்

பெரியவர்களுக்கும் பொறுப்பு இருக்கிறது: பெரியவர்களுக்கே அதிகமான பொறுப்பு இருக்கிறது.

'மிசா' கணேசன் (தி.மு.க):

• சம்பத் அவர்கள் கூறியது போல் மாணவர்களிடையே லட்சியப் பிடிப்பும், விழிப்புணர்ச்சியும் குறைந்து கொண்டு வருவது உண்மை. முன்பெல்லாம் "சமுதாயத்திற்குத் தொண்டு செய்ய வேண்டும் என்ற எண்ணம் உடைய மாணவர்கள் அரசியலுக்கு வந்தார்கள். ஆனால் இப்போதுள்ள அரசியல் வாதிகளைப் பார்த்து, இவர்களும் பழகி விட்டார்கள். 'ஏதாவது பதவி தருகிறீர்களா? வருகிறோம்' என்று சொல்கிறார்கள். எந்த வித தியாகங்களையும் செய்யாமல் முன்னேறத் துடிக்கும் மாணவர்களின் இந்த மனப் போக்கு மாற வேண்டும். வேலை வாய்ப்பு தேடித் தந்தால் மட்டும் போதுமானது" அல்ல; ஒரு லட்சியப் பிடிப்பை அவர்களிடம் உருவாக்க வேண்டும். தாங்கள் செய்யும் பணி பெரிதானாலும், சிறிதானாலும் அது சமுதாய, தேச முன்னேற்றத்துக்கு உதவுகிறது என்பதை உணர்ந்து சிரத்தையுடன் பணியாற்ற அவர்களுக்குக் கற்றுத் தர வேண்டும். இதற்குரிய சிந்தனைத் திறனை இளைஞர்களிடம் ஏற்படுத்த நாம் முயல வேண்டும்.



ரங்கராஜன் குமாரமங்கலம்

ரங்கராஜன் குமாரமங்கலம் (இ. காங்கிரஸ்):

இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு வசதிக்காக, அரசியல் சட்டத்தில் திருத்தம் செய்ய வேண்டும் என்று சொன்னார்கள். அந்தச் சட்டத் திருத்தம் வந்தால் கூட, நடைமுறையில் அது சாத்தியப்படுமா என்பதில் எனக்கு சந்தேகம் இருக்கிறது. 'சட்டத்திலேயே உங்களுக்கு உரிமைகள் கொடுத்து விட்டோம்' என்று அரசியல் வாதிகள் கூறி அத்துடன் நழுவுவதற்கு வேண்டுமானால் அது உதவக் கூடும்! பார்க்கப் போனால் வேலை செய்யும் உரிமை அரசியல் சட்டத்தில் ஏற்கனவே இருக்கிறது. **Directive principles** ல் உள்ளது. அடிப்படை உரிமைகளை விட **Directive Principles** முக்கியம் என்பதாகக் கோர்ட் தீர்ப்பும் உள்ளது. எனவே சட்டத் திருத்தம் தேவையில்லை. ஏற்கனவே நல்ல பல திட்டங்கள் இருக்கின்றன: அவைகளை அமுல் படுத்தினாலேயே வேலை வாய்ப்பு பெருகக்



டபிள்யூ. ஆர். வரதராஜன்



செல்வி பாரதி



மிசா. கணேசன்

கூடும். தற்போது அரசியலில் ஒரு இளைய தலைமுறை வந்திருக்கிறது. இது வரை திட்டங்களை அமுல்படுத்த வேண்டிய நிலையில் இருந்த அதிகாரிகள் முதிய அரசியல்வாதிகளை ஏமாற்றிக் கொண்டோ அல்லது அவர்களுடன் கூட்டு சேர்ந்து கொண்டோ, அந்தத் திட்டங்களை ஏனோ தானோ மனப்பான்மையுடன் அமுல் படுத்துவதில் தயக்கமும் தாமதமும் காட்டி வந்தார்கள். இனி அப்படி செய்ய முடியாது. நிலைமை மாறத்தான் போகிறது.

முன்பெல்லாம் கொள்கைகளும், லட்சியப் பிடிப்புக்களும் கொண்டு இயங்கிய மாணவர்களை ஆதரிக்கத் தக்க தலைவர்கள் இருந்தார்கள். ஆனால் இன்று தட்டிக் கொடுத்துச் சரியான பாதையில் இளைஞர்களைக் கொண்டு போக தலைவர்களுக்குத் தார்மீக ரீதியாக எந்த உரிமையும் இல்லை. ஏனென்றால் துரதிஷ்டவசமாக இன்று அரசியலில் எந்த கட்சியானாலும் சரி, தூய்மையில்லாதவர்கள், நேர்மையற்றவர்கள் பலர் பதவியில் அமர்ந்து இருக்கிறார்கள். இது மாணவர்களிடையே தவறான முன்னுதாரணமாக அமைந்து விடுகிறது.

வரதராஜன் (மார்க்ஸிஸ்ட்):

இளைஞர் ஆண்டு துவங்கி மூன்று மாதங்கள் முடிந்து விட்ட நிலையில், இளைஞர்களிடையே எந்த வித சலசலப்பையோ, உற்சாகத்தையோ காணோம் என்பதைக் கவனிக்கிறோம். சம்பிரதாயமான சில விழாக்கள், கருத்தரங்கங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. இதுவும் ஓய்ந்து போகும் இன்னும் சில நாட்களில். ஆக இந்த இளைஞர் ஆண்டும் ஏதோ ஒரு சம்பிரதாயமாக முடிந்து விடும் என்று தோன்றினாலும் அந்த அளவுக்கு நம்பிக்கை இல்லாதவனாக இருக்கவும் நான் விரும்பவில்லை. இன்றைக்கு நாட்டில் திறமைக்கு, தகுதிக்கு மதிப்பில்லை. ஒரு இளைஞன் தான் விரும்பிய கல்வியைப் படிக்க முடியவில்லை. காரணம் கல்வி வியாபாரமாகி விட்டது. அதே போல், எந்த தொழில் செய்ய வேண்டுமென்று விரும்புகிறானோ அதற்கு வாய்ப்பில்லை. ஏதோ ஒரு படிப்பு, ஏதோ ஒரு வேலை அல்லது தொழில் அவன் மீது திணிக்கப்படுகிறது. சுதந்திரத்திற்கு முன் எல்லோருக்கும் நாடு விடுதலை பெற வேண்டும் என்ற லட்சியப் பிடிப்பு இருந்தது. சுதந்திரத்திற்கு அப்புறம் நாட்டை முன்னேற்ற வேண்டுமென்றோ செழிக்க வைக்க வேண்டுமென்றோ ஒரு லட்சியப் பிடிப்புடன் யாரும் செயல்பட்டதாகவும் தெரியவில்லை, அத்தகைய லட்சியப் பிடிப்பை இளைஞர்களுக்கு யாரும் ஏற்படுத்தித் தரவும் இல்லை. இது ஏற்பட்டால், இதற்கு முந்தைய தலைமுறையைச் சேர்ந்தவர்களை விட அதிகமான லட்சியப் பிடிப்போடு கொள்கை வெறியோடு நமது இளைஞர்கள் செயல்படுவார்கள். நமது நாடு ஏழை நாடு அல்ல. மற்ற பல நாடுகளை ஒப்பிடுகையில் வளம் மிக்க நாடுதான். ஆனால் அந்த வளங்களை சுதந்திரத்துக்கு பிறகு ஆட்சிக்கு வந்தவர்கள் எந்த அளவுக்குப் பயன் படுத்தி நாட்டை முன்னேற்றி இருக்கிறார்கள்? இவ்வாறு முன்னேறும் லட்சிய வெறியை எந்த அளவுக்கு மக்களிடையே ஊட்டினார்கள்? இவைகளை உணர்ந்து செயல்பட்டால், எதிர் காலம் இளைஞர்களின் கையில் தான்.

செல்வி பாரதி:

நமது நாட்டில் பெண்களுக்குத் திருமணம் என்பது பெரும்பாலும் ஒரு விபத்தாகவே முடிகிறது. ஆண் பிறந்தது முதலே அவன் படிக்க வேண்டும், உத்தியோகத்துக்குப் போக வேண்டும். சம்பாதிக்க வேண்டும் — என்ற நோக்கத்துடன் வளர்க்கப் படுகிறான். ஆனால் பெண்களோ திருமணம் தான் அவர்கள் வாழ்க்கையின் குறிக்கோள் என்ற கருத்தில் வளர்க்கப் படுகிறார்கள். இது மாற்றப் பட வேண்டும். மாறி வரும் இந்த சமுதாயத்தில் ஆண், பெண் இருபாலருக்குமே கல்வித் திட்டங்களை காலத்துக்கு ஏற்றாற் போல் தயாரிக்க வேண்டும். பெண்களுக்கு சமுதாய பிரக்ஞையை உருவாக்கினால் தன்னம்பிக்கையை வளர்த்தால், திருமணம் என்ற விபத்தில் அவர்கள் சொற்ப காயங்களுடன் தப்ப முடியும்!

பிரபாகரன்:

அரசியல் முடிவுகள் எடுக்கக் கூடிய இடங்களில் இப்போதுதான் இளைஞர்கள் புகுந்திருக்கிறார்கள். கட்சிகள் இப்போது தான் இளைஞர்களுக்கு இடம் கொடுத்திருக்கின்றன. காலத்துக்குக் காலம் சூழ்நிலைகளுக்கு ஏற்ப லட்சியங்கள் மாறிக் கொண்டு வருகின்றன. சுதந்திரப் போராட்டம், இந்தி எதிர்ப்பு போராட்டம் போன்ற கால கட்டங்களில் இளைஞர்களுக்கு ஒரு லட்சிய வெறி இருக்கவில்லையா? இது போல் ஒரு புதிய ஆக்க பூர்வமான லட்சியப் பிடிப்பை இளைஞர்களே ஏற்படுத்திக் கொள்ளலாம். உதாரணமாக மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் தரப் பட வேண்டும் என்ற லட்சிய முனைப்புடன் இளைஞர்கள் — மாணவர்கள் ஏன் செயல்படக் கூடாது? இந்த நோக்கம் நிறைவேறினால் சமுதாயத்திற்கு இன்னும் பல நன்மைகளை விரைவாகச் செய்ய வாய்ப்பு ஏற்படுமே! ஒரு புதிய சிந்தனை, புதிய எழுச்சி இளைஞர்களிடம் உருவாக வேண்டும்.

சம்பத்:

இந்த இளைஞர் ஆண்டின் ஸ்லோகன் 'அமைதி', பங்கு கொள்ளுதல், வளர்ச்சி **(Peace, participation, development)** என்பது தான். வளர்ச்சிக்கு இளைஞர்களின் பங்கு அதிக அளவில் தேவை. அந்த வளர்ச்சியைக் கொண்டு வர இளைஞனுக்கு ஆழ்ந்த கல்வி அறிவும், பரந்த பொது அறிவும் தேவை. ஆனால் இன்றைய கல்விக் கூடங்கள் வாழ்க்

கைக்குப் பயன் படுகிற தன்னம்பிக்கையை வளர்க்கிற கல்வியை அளிப்பதில்லை. அவை வியாபார ஸ்தலங்களாகி விட்டன. ஒரு கோர்ஸில் லாபம் வராவிட்டால் அந்த கோர்ஸையே எடுத்து விடுகிறார்கள்!

இந்த இளைஞர் ஆண்டில் நான் வேண்டுவதெல்லாம், இளைஞர்களை அடக்காதீர்கள், ஒடுக்காதீர்கள். சுதந்திரமாக சிந்திக்கவும், செயல்படவும் வையுங்கள். அப்போது தான், நாட்டின் எதிர் காலமும் இளைஞர்களின் எதிர் காலமும் பிரகாசிக்கும்.

'மிசா' கணேசன்:

இன்றைய இளைஞர்கள் தலைவர்களுடைய இன்றைய நிலையை மட்டும் பார்த்து நாமும் எப்படி பதவியைப் பெறுவது என்று திட்டம் போடக் கூடாது. எந்த வித கொள்கைப் பிடிப்போடு, எத்தனை தியாகங்களைச் செய்து பதவிகளைத் தலைவர்கள் பெற்றிருக்கிறார்கள் என்பதைச் சிந்திக்க வேண்டும்.

அறிவில் சிறந்தவர்களும், நேர்மையானவர்களும் முதியவர்களாக இருந்தாலும், இளைஞர்களுக்கு ஆலோசனை கூறவும், வழி நடத்திச் செல்லவும் தயாராக இருக்க வேண்டும். இரு சாராரும் இணைந்து செயல்பட்டால், எதிர் காலம் அருமையாக அமையும்.

ரங்கராஜன் குமாரமங்கலம்:

மூத்தவர்கள் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பேச மாட்டார்கள். பழம் பெருமையைப் பேசிக் கொண்டிருப்பார்கள். மூத்தவர்களையும் இளைஞர்களையும் வைத்து நாட்டை நடத்திச் செல்ல வேண்டுமென்பதில் எனக்கு உடன்பாடில்லை. ஏனென்றால் மூத்தவர்களில் 95 சதவீதத்தினர் பழைய வழக்கங்களில் ஊறினவர்கள். என்னைக் கேட்டால், முதியவர்களை ஆலோசனை அளவிலே வைப்போம். அந்த ஆலோசனைகளிலும் இன்றைக்கு ஏற்கக்கூடியவற்றை மட்டுமே ஏற்போம். செயல்படுவதற்கு இளைஞர்களைப் பயன்படுத்துவோம். இன்று நாடு இருக்கும் சூழ்நிலை இளைஞர்களுக்குச் சாதகமானது. இந்த வாய்ப்பைத் தவற விட்டால், இளைஞர்களின் எதிர்காலம் மட்டுமல்ல, இந்த நாட்டின் எதிர் காலமே பின்னுக்குத் தள்ளப்படும்.

வரதராஜன்:

ஓர் இளைஞர் பிரதமராக இருப்பதால் ரங்கராஜன் குமாரமங்கலம் உற்சாகமாகப் பேசுகிறார். ஆனால் நமது பிரதமர் மின்னணுத் துறையில் நாம் வேகமாக முன்னேற வேண்டுமென்று ஒரு வேகத்தில் செயல்படுகிறார். இந்த மின்னணு புரட்சியில், ஆட்களுக்கு பதிலாக கம்ப்யூட்டர்களோ அல்லது ரோபாட்களோ உபயோகப்படுத்தப்படும். வேலை வாய்ப்புக்குக் கடுமையான பஞ்சம் ஏற்படும். எனவே மின்னணு புரட்சி நமக்கு தேவைதானா? இது பற்றி ஒரு பயனுள்ள விவாதம் நடத்துவது நல்லது. ஏனென்றால் இது இளைஞர்களைப் பாதிக்கும் விஷயம்.

மின்னணுதுறையினால் வேலைவாய்ப்புக்கு அபாயம் இல்லை; புது மாதிரியான வேலை வாய்ப்பு நிறைய உருவாகும் என்கிறார்கள். இது மேல்நாட்டுக்குப் பொருந்தும் அளவில் கல்வி அறிவு அதிகமில்லா மக்களைக் கொண்ட நம் நாட்டில் பொருந்துமா என்று சிந்திக்க வேண்டும். நமது நாட்டிற்கு அரசியல் விடுதலை வந்திருக்கிறதே தவிர பொருளாதார விடுதலை இன்னும் வரவில்லை. அந்தப் பொருளாதார விடுதலையைப் பெற, அந்த இலக்கை நோக்கி, நமது இளைஞர்கள் வீர நடை போடுவதற்கு ஏற்ற கொள்கையை இந்த அரசு பின்பற்றப் போகிறதா என்பதே முக்கிய கேள்வி.

மாண்புமிகு தம்பிதுரை. (நாடாளுமன்ற துணை சபாநாயகர்):

ஆணுக்கு பெண் சமம் என்பது போல், பெரியவர்கள் இளைஞர்கள் எல்லோரும் ஒன்றே என்ற நிலை இன்று ஏற்பட்டுள்ளது. முதியவர்கள் இளைஞர்களை முட்டுக் கட்டை போட்டு நிறுத்துவது என்பது இனி நடக்க முடியாத ஒன்று. ஒவ்வொரு தனிப்பட்ட இளைஞனும் சமுதாயத்துக்கு ஏதாவது நன்மை செய்ய விரும்பினால் எத்தனையோ இளைஞர் சங்கங்கள் இருக்கின்றன. சமுதாய பணிகளில் இறங்கியுள்ள அந்த சங்கங்களில் சேர்ந்து சமுதாயப் பணி ஆற்றலாம். அரசு எவ்வளவோ நல்ல திட்டங்கள் போட்டும் பல மக்களைச் சென்று அடைவதில்லை. இளைஞர்கள் மக்களிடையே ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தி, இந்த திட்டங்களின் பலனை அனுபவிக்க வைக்கலாம். அது அவர்கள் உரிமை என்பதை உணர்த்தலாம்.

இன்று இந்த நாட்டு மக்கள் ஒரு இளைய தலைமுறையை முக்கிய பொறுப்பில் அமர்த்தியிருக்கிறார்கள். சமுதாயப் பணி செய்ய நல்ல வாய்ப்பு இளைஞர்களுக்கு காத்திருக்கிறது.

புதிய சமுதாயம் படைக்க வேண்டுமென்றால் பொருளாதார விடுதலை வர வேண்டும். எனவே இளைஞர்கள் தேசத்தின் பொருளாதார மேம்பாட்டுக்கு என்ன செய்யப் போகிறோம் என்று அந்த அடிப்படையில் சிந்தித்துச்செயல் பட்டார்கள் என்றால் நல்லது.

ஒரு கொந்தளிப்பு வரும் போது தான் ஒரு புரட்சி வர முடியும். ஒரு பக்கம் வேலையில்லாத் திண்டாட்டமும், இன்னொரு புறம் விஞ்ஞான முன்னேற்றமும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் சென்று கொண்டு இருக்கிறது. இதை மாற்ற ஒரு புதிய சிந்தனைப் புரட்சி ஏற்பட்டே தீரும்.

உரையாடல் ஏற்பாடு, தொகுப்பு: ப்ரியன்

படங்கள்: உத்ரா














"பதவிக் காலம் முடிவதற்கு முன்பே
ராஜினாமா செய்யத் தயார்" — ஹெக்டே





# கல்கி

1985 ஏப்ரல் 14
மலர் 43. இதழ்: 37
குரோதன சித்திரை 2



## இளைஞர்களின் எதிர்காலம் இருட்டு!

இளைஞர் ஆண்டு — சிறப்பிதழ்கள்; சொற்பொழிவுகள்; கருத்தரங்குகள்; அமைச்சர்களுக்குப் பூ மாலை; — முடிந்தது கதை. அடுத்த வருஷம் புதிய பெயருடன் வேறு ஓர் ஆண்டு.

இளைஞர் ஆண்டு என்பதால் வாலிப உள்ளங்களில் துளியேனும் அதிகப்படி உற்சாகம் காணப்படுகிறதா? இல்லை. காரணம், எதிர் காலம் இருட்டாக இருப்பதுதான். கல்விக் கூடங்களில் இடமில்லை, இடமிருந்தாலும் தகுதிக்கு மதிப்பில்லை, விரும்பியதைப் ப்டிக்க முடியாது. படித்த பின் வேலையில் அமர முடியாது. எதிலும் நிச்சயமற்ற நிலை. உற்சாகம் எப்படி சுரக்கும்? இன்றைய நிலையை இப்படியே நீடிக்க விட்டால் நாளைய இளைஞர்களின் கதி என்ன? நினைத்தாலே கவலை கவ்வுகிறது.

இத்தனை இருட்டில் ஒரே ஒரு ஒளிக் கீற்று. இளைஞரான ஒருவர் பிரதமராகியிருக்கிறார். அவர் ஏதேனும் செய்து, எப்படியும் இளைஞர்களைக் கடைத்தேற்றிவிடுவார் என்று நம்பிக் கொண்டிருக்கிறோம். இந்த நம்பிக்கையும் பொய்த்தால் விமோசனமே இல்லை. ஜாதிப் பாகுபாடு, வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற கொடுமைகளிலிருந்து இளைஞர் சமுதாயத்தைக் காப்பாற்றியே ஆக வேண்டும்.

நடக்க வேண்டியவை மூன்று. முதலாவது தன்னம்பிக்கை அளிக்காத, சுயச்சார்பின்றி பிறர் தயவையே எதிர்பார்க்கச் செய்கிற இந்தக் கல்வி முறைமாறியே ஆக வேண்டும். இளைஞர்கள் மேஜை — நாற்காலி உத்தியோகம் தேடாமல் சரீரத்தால் உழைத்துப் பாடுபடக் கூடிய, உடல் — மனப் பக்குவங்களைக் கல்விக் கூடங்கள் உருவாக்க வேண்டும். என்ன செலவானாலும் சரி என்று இதை யுத்த கால முயற்சியாக ஏற்று நடத்திக் காட்டியே ஆக வேண்டும். இதற்காக வேறு பல செலவினங்களை ஒத்திப் போடலாம், தவறில்லை. கல்விக் கூடங்களில் இடமில்லை என்ற பேச்சே எழாத அளவிற்கு இத்தகைய கல்விக் கூடங்கள் பெருக வேண்டும்.

இரண்டாவது, புதிய புதிய 'தொழிலகங்கள்' ஏராளமாய் ஏற்பட்டு வேலை வாய்ப்புக்கள் அதிகரிக்கிற மாதிரி அரசின் தொழில் — பொருளாதாரக் கொள்கைகள் மாற வேண்டும். எலெக்ட்ரானிக்ஸ் துறையில் அதிக நம்பிக்கை வைத்துள்ளார் நம் பிரதமர். அது புதிய வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்தும் என்றும், வேலை இல்லாத் திண்டாட்டத்தைப் பெருக்கும் என்றும் இருவிதமாகவும் பேசப்படுகிறது. எச்சரிக்கை தேவை. தானியங்கு முறையிலன்றி அதிகம் பேருக்கு வேலை தந்து மக்களின் உழைப்பாற்றலைப் பயன் படுத்தும் தொழில்களுக்கு விசேஷச் சலுகைகள் தரப்பட வேண்டும்.

மூன்றாவதாக ஒரு லட்சிய அறை கூவலை இளைஞர் முன் பிரதமர் வைக்க வேண்டும். அவர்களது உழைப்பார்வத்தையும், லட்சிய வெறியையும் தூண்டி விட வேண்டும். பிரதமரை விட்டால் இதற்கு வேறு ஆள் கிடையாது. புதிய இந்தியா உருவாக இதுவே வழி.

இவற்றையெல்லாம் செய்யாமல், 'இளைஞர்களே! சமுதாயப் பணி ஆற்றுங்கள்; நாட்டுக்கு உழையுங்கள்' என்று குட்டித் தலைவர்கள் கொட்டி முழங்குவதாலோ, 'கெட்டுப் போகாதீர்கள்; நல் வழியில் செல்லுங்கள்' என்று உபதேசிப்பதாலோ ஒரு பயனும் விளையாது. இளைஞர்கள் கவரப்பட மாட்டார்கள். அவர்கள் வெற்று வேட்டான வார்த்தைகளை நிறையவே கேட்டுஅலுத்துச்சலித்துப் போயிருக்கிறார்கள்.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# நேரம் நல்ல நேரம்



கே. பாலசந்தர்

''இந்த நேரம் நல்ல நேரம் நிகழ்ச்சியை நான் கேட்டிருக்கேன். ரொம்ப இன்ட்ரஸ்டிங்கா இருக்கு. அதனுல தான் என்னைக் கேட்டதும், மகிழ்ச்சியோட ஒப்புக் கொண்டேன்.''

— கே. பாலசந்தர்
4.3.85 நே. ந. நேரம் நிகழ்ச்சியின்
தொடக்கத்தில்

கேள்வி (1): முதன் முதலில் சினிமாப் படம் டைரக்ட் செய்ய வேண்டும் என்று தோன்றிய போது. அந்த எண்ணத்தைப் பகிர்ந்து கொண்டது யாரிடம்? தாயா? தாரமா? (ஆர். கீதா, சென்னை—18)

கே. பாலசந்தர்: (சிரிப்பு) இந்த எண்ணம் தோன்றினதும், என் மனைவிக்கிட்டே சொல்லியிருக்கவே முடியாது. இன்னும் கேட்டா, அவ பிறந்திருக்கவே மாட்டா! சின்ன வயசில (12 வயசு) டூரிங் தியேட்டர்ல வெளியில வெயிட் பண்ணி, அங்கே வெட்டி எறியப்படற துண்டு ஃபிலிம்களை எடுத்துக்கிட்டு வந்து, வீட்டுத்திண்ணையிலே, கண்ணுடி வழியா, சூரிய வெளிச்சத்தை அடிச்சு, பூதக்கண்ணுடி மூலமா, இமேஜ்களைப் பார்த்து, நானே படமெடுத்ததா நினைச்சு சந்தோஷப்படுவேன்; மெய் சிலிர்த்துப் போவேன்; அது என் ரத்தத்துல கலந்து, பிற்காலத்துலே நாடக எழுத்தாளனுகி, சினிமாவுக்குப் படிப்படியா வந்திருக்கேன். படிப்பை விட்டா, அந்த வயசிலே, சினிமா தவிர வேற எதுவும் என் கவனத்தைக் கவரலே.

கேள்வி (2): தண்ணீர்! தண்ணீர்!, அக்னி சாட்சி, அச்சமில்லே! அச்சமில்லே! போன்ற உங்கள் படங்களில், உங்களால் நடிக்க வைக்கப்பட்டவர் சரிதா என்பதை விட, சரிதாவின் உணர்ச்சி பூர்வமான நடிப்பாற்றல்தான் உங்கள் மனத்தில் தோன்றி இப்படிப் பட்ட கதைகளைப் படம் எடுக்க உங்களைத் தூண்டியது என நினைக்கிறேன். நான் சொல்வது சரியா? (மங்களா சேஷாத்ரி, பாடி.)

கே. பாலசந்தர்: கேள்வியிலே ஏதோ ஒரு மயக்கம் இருக்கு. பொதுவாகவே என் படங்களில், பெண் கேரக்டர்கள் ரொம்ப பவர்ஃபுல்லா அமைந்திருப்பாங்க. எந்தப் பாத்திரத்துக்கு, எந்த நடிகையைப் போட்டாலும், அவங்களோட முழுத் திறமையையும் வெளிக் கொணர்ந்து பயன்படுத்திப்பேன். சில சமயம், ஆன் தி ஸ்பாட், ஒரு குறிப்பிட்ட நடிகன் அல்லது நடிகையோட அசாதாரணமான திறமையை, கதையோட்டத்துக்கு நாரேஷனுக்குச் சாதகமா உபயோகிச்சுப்பேன். 'அச்சமில்லே, அச்சமில்லே'ல, ஒரு காட்சி; 250 அடி நீளம் இருக்கும்; திரையில் இரண்டரை நிமிஷம் ஓடும். சரிதாவுடைய முழுத் திறமையைப் பயன்படுத்திக்கிட்டேன். இதே மாதிரி மரோசரித்ரா, ஏக் தூஜே கேலியேலே, கமலோட திறமையைப் பயன்படுத்திக்கிட்டேன். அந்தந்த மண்ணுக்கேற்ற முறையில் கமல் இந்தி பேசிக் காட்டற சீன். கமல் இந்திக்குப் புதுசானுலும், மொத்த டயலாக்கையும் ஒரே ஷாட்லே வெச்சேன். ஏன்னு, கமலோட திறமை எனக்குத் தெரியும். அதோட மட்டுமில்லே. கமல் தமிழன். வடநாட்டுக்காரங்க, கமல் இத்தனை விதமான இந்தி பேசுவான்கிறதை தெரிஞ்சிக்கணும்னு அதை அமைச்சேன். 3 மணி நேர ரிகர்சல் குடுத்தேன். ஒரே டேக்கிலேயே பிரமாதமா பண்ணிட்டான். இது கமல் ஒருத்தனுலத் தான் முடியுமே தவிர வேற யாராலேயும் முடியாது. நடிக, நடிகையரோட திறமையை நம்மோட அட்வான்டேஜுக்கு எக்ஸ்பிளாயிட் பண்ணிக்கிறதில் தப்பே இல்லே. நான் அதைத்தான் பண்ணிக்கிட்டிருக்கேன்.

ரமணன்: ''நீங்க ஸ்கிரிப்டை முதலிலேயே ரெடி பண்ணிவிட்டுத்தான் லொகேஷனுக்குப் போவீங்களா? லொக்கேஷனுக்குப் போனப்புறம் மாற்றம் பண்ணுவீங்களா?

# “கமல் ஒருவரால் தான் முடியும்”



இரண்டரை நிமிஷத்துக்கொரு காட்சி — சரிதாவின் முழுத் திறமையையும் வெளிப்படுத்திய காட்சி — இடம் பெற்றது ''அச்சமில்லை! அச்சமில்லை!'' படத்தில்.

கே. பாலசந்தர்: ''முழுமையா ஸ்கிரிப்டை நான் வைச்சுக்கறதில்லை. இதுதான் என்னுடைய பலவீனம்; அதே சமயத்தில் இதே தான் என் பலமும் கூட. ஒருவேளை நான் முழு ஸ்கிரிப்டைத் தயார் பண்ணிக்கிட்டுப் போனா, டைரக்டர் என்கிற முறையில் தோல்வி கூட கண்டிருக்கலாம். அப்படி இல்லாததினாலதான் ஓரளவுக்கு வெற்றியடைய முடிஞ்சுதோ என்னவோ? முழு ஸ்கிரிப்டையும் தயார் பண்ணிகிட்டு போயிட்டா, மெக்கானிக்கலாக வேலை செய்ய வேண்டியிருக்கும். யோசிக்கற மூடே வராது. நான் ஸெட் அட்ஜஸ்ட் பண்ணுகிற நேரத்துல நிறைய யோசிப்பேன். இல்லாட்டி அந்த நேரத்திலே அரசியல், அடுத்தவங்களைப் பற்றிய வம்பு என்றெல்லாம் பேச வேண்டிய நிர்ப்பந்தம் வரும். அதுக்கு நான் இடம் தருவதில்லை. ஷாட் எப்படி எடுக்கிறது? என்ன டயலாக் தருவது? யாருக்குக் குளோஸப் தருவது? யாருக்கும், யாருக்கும் இன்டராக்ட் பண்ணுவது? காமிராக்கோணம் என்ன? — இதெல்லாம் பற்றி யோசிப்பேன். இப்படி பண்ணறதினால, திரையில் பார்க்கிறப்போ, நான் நினைச்சதை விடப் பல மடங்கு அதிகமாய் வந்திருப்பதை உணர முடியும்.

கேள்வி (3): சினிமா ஒரு சிறந்த மீடியம் என்பது உங்களுக்குத் தெரியும். அப்படி இருந்தும் நீங்கள் சில படங்களைத் தவிர மற்ற படங்களில் நடை முறை வாழ்க்கைக்கு ஒவ்வாத முறையில் தான் கதை அமைத்துத் தருகிறீர்கள். உதாரணமாக அபூர்வ ராகங்களை எடுத்துக் கொள்ளலாம். ஏன் இந்த முரண்பாடு? அல்லது இந்த மாதிரி ஃபார்முலாவை உங்கள் ஸ்டைலாகக் கருதுகிறீர்களா? (பொன்ராஜ்குமார், கமுதி).

கே. பாலசந்தர்: ராஜ்குமார்! உங்க கருத்திலேயிருந்து நான் மாறுபடறேன். உதாரணம்னு சொல்லிட்டு ஒரே படம்தான் சொல்லியிருக்கீங்க. இன்னொரு படம் உங்க கவனத்துக்கு வரலே. அப்போ, முரண்பாடான விஷயமுள்ள படம் ஒண்ணே ஒண்ணு தான். அதையே எடுத்துக்கிட்டாலும் அதுலே சொல்லப்பட்டிருக்கிற விஷயம், நடை முறைக்கு ஒவ்வாததுன்னு சொன்னா, நான் ஒத்துக்கவே மாட்டேன். அதாவது, அங்கொன்றும், இங்கொன்றுமாய், எப்பவாவது நடப்பது கூட, நடை முறையில் நடக்கிற விஷயங்கள்தான். அப்படி நடக்கிற விஷயங்களை எடுத்துக் கையாளுவதிலே ஒரு சவால் இருக்கு. அந்தச் சவாலை ஏற்று, வெற்றிகரமாய் அமைக்கிற போதுதான், அதுலே கிரியேடிவிடியும், பூரணத்துவமும் கிடைக்குது. மற்றவர்கள் எடுத்துக்க பயப்படற விஷயங்களை எடுத்துக் கையாளுகிறது எனக்குப் பிடிச்ச ஒண்ணு. அதை என் ஸ்டைல்னு நீங்க சொன்னா, அதுக்காக நான் பெருமைப் படத்தான் செய்யணும்.

தொகுப்பு: **மௌஷ்மி**

படம்: **யோகா**

மாமனார் அவர்களுக்கு,

நேற்று டாக்டரைக் கன்சல்ட் செய்ததில் உங்கள் மகள் மாலாவிற்கு டான்சில்ஸ் ஆபரேஷன் ஒரு வருடம் முன்பாகவே செய்திருக்க வேண்டுமாம். எனக்கும் மாலாவிற்கும் திருமணம் ஆறுமாதத்திற்கு முன்தான் நடந்தது.

எனவே நான் மாலாவை அங்கு ஆபரேஷனுக்காக அனுப்பி வைக்கட்டுமா அல்லது நீங்கள் ஆபரேஷனுக்கான பணத்தை இங்கே அனுப்பி வைக்கிறீர்களா என்பதை உடன் தெரிவிக்கவும்.

இப்படிக்கு, மருமகன்.

— அ. தெய்வசிகாமணி






* 'குழந்தை' போட்டோ க்விஸ் — ஒரு நடிகையாகத்தான் இருக்குமென்று பார்த்தால், கடைசியில் நம் அசாருதீன் — 'கல்கி' வித்தியாசமான பத்திரிகை!

சென்னை—5, ஜெ. சீதாராமன்.

* ராஜீவின் முதல் பட்ஜெட்டின் உண்மை நிலையை ''பட்ஜெட் பச்சடி'' தலையங்கம் மூலம் தெளிவு படுத்தியிருந்த விதம் பாராட்டுக்குரியதாகும்.

கோவை—43, என். பாலகிருஷ்ணன்.

* யோகாசன மகிமையில் நிபுணர்களின் பதில்கள் கண்டேன். யோகாசனம் பயிலாத வரையும் பயில வைக்கும் காந்தச் சொற்கள்.

பட்டிச்சுரம், பி. நெடுஞ்செழியன்.

* ராகவனைப் போன்ற அயோக்கியர்களுக்கு, அரசு, சரியான தண்டனை வழங்க வேண்டும். அப்போது இது போன்ற பெண் பிடிக்கும் கயவர்களுக்குச் சரியான பாடமாக அமையும்.

ஈரோடு—1, ஷோபா கல்யாணி.

* ரயில்வே பட்ஜெட் — மத்திய பட்ஜெட் எனும் மரண அடியில் இருந்து மீளும் முன்பே தமிழக பட்ஜெட்டும் வெளி வந்து பாமர .குடிமகனை வாட்டிய வாட்டத்தைத் தெளிவாக்கினார் கார்டூனிஸ்ட் உமாபதி. அருமையான கார்டூன்.

திருச்சி—17, எஸ். கே. பாரி.

* ''அமைச்சர்களே புது அமைச்சர்களே!'' என்ற பகுதியில், மிளகாய், புளி, தனியா, மஞ்சள் போன்ற உணவுப் பொருள்களுக்கு வரி விலக்கு தர முடியாவிடினும், ஒரு முனை வரியோடு நிறுத்திக் கொள்ளுமாறு வணிக வரித்துறை அமைச்சர் வீராசாமி அவர்களுக்குக் கோரிக்கை வைத்தோம். எங்கள் கோரிக்கைகளுக்கு இணங்க மேற்கண்ட பொருள்களுக்கு ஒரு முனை வரியாக்கியமைக்கு அமைச்சருக்கு மட்டுமன்றி தக்க காலத்தில் எங்கள் கோரிக்கையை வெளியிட்ட கல்கிக்கும் எங்களின் இதயப்பூர்வமான நன்றி.

ஜி. கிருஷ்ணமூர்த்தி
சைதாப்பேட்டை வர்த்தக

சென்னை—15, சங்கம்.

* இன்றைக்கு 'இன்குலாப்' ஏழைகளைப் பற்றி பாடுகிற கவிஞர் என்பதற்காக அன்று அரசர்களையும், காவியத் தலைவர்களையும் பாடிய கவிஞர்களை கவிஞர்களே இல்லை என்று சொல்லி விட முடியுமா?

சென்னை—57, இரணியல் 'தலை'

* பணத்துக்காகவே பாசம் காட்டி மணந்து பின் மோசம் செய்த மோசடி ஆசாமிகளிடம் ஏமாந்து பாதிக்கப்பட்ட பாவையர்க்கு ஆதரவாகச் செயலாற்றி வரும் ஜனநாயக மாதர் சங்கத்தையும் — தலைவி திருமதி மைதிலி சிவராமன் அவர்களையும் அறிமுகப்படுத்தியமைக்குத் தமிழகத் தாய் குலத்தின் சார்பாக நன்றி.

திருச்சி—1, சிவசுந்தரி.

## வட்டமேஜை

* முத்து தங்க ஐயப்பன் எழுதிய சிறுகதை 'இன்னொரு மகாத்மா' படித்த போது கண்ணீர் மல்கியது. முத்துக்குமரன் லட்சத்தில் ஒருவன். இப்படிப்பட்டவர்கள் ஆயிரத்தில் ஒருவன், நூற்றில் ஒருவன் என்று உருவாக ஆரம்பித்தால் நம் இந்தியா வெகுவேகமாக முன்னேறி விடும்.

அம்முண்டி, எம். ராணி பார்த்தசாரதி.

* ''கம்பல்சரி டெபாசிட்'' இனி இல்லை என்றார்கள். மகிழ்ச்சி. ஆனால் அது அடுத்த ஆண்டுக்குத்தான்; இந்த வருடம் கட்ட வேண்டும் என்று சொல்லிவிட்டார்கள்! மேலும் இந்த வருடம் திருப்பித் தர வேண்டிய கம்பல்சரி டெபாசிட்டைத் திருப்பித் தர மாட்டார்களாம். அடுத்த ஆண்டுதான் திருப்பித் தருவார்களாம். அப்படியானால் அடுத்த ஆண்டு திருப்பித் தர வேண்டியதை அதற்கு அடுத்த ஆண்டுதான் தருவார்களோ?

நாளைக்கு அரசு வங்கியில் உள்ள ஃபிக்ஸட் டெபாசிட்டைக் கூட ஒரு வருஷம் சென்று திருப்பி வாங்கிக் கொள்ளுங்கள் என்று அரசு கூறலாம்! இப்படியெல்லாம் செய்தால் அரசாங்கத்தினிடம் மக்களுக்கு மதிப்பும் நம்பிக்கையும் குறைந்து விடும்.

திருநெல்வேலி, எஸ். ராமநாதன்.

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)





# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1985

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறுகதை போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

| | |
|---|---|
| முதல் பரிசு | ரூ 1000 |
| இரண்டாவது பரிசு | ரூ 500 |
| மூன்றும் பரிசு (இரு கதைகளுக்கு தலா ரூ 250 வீதம்) | ரூ 500 |

ஆக மொத்தம் ரூ 2000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்றும், கதை வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதி மொழி தர வேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

கதைகளை 'அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15

* உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 4 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

ஆசிரியர், கல்கி, சென்னை—600 032.

# உக்கிராணம்

## ம.வே.சிவகுமார்



லக்ஷ்மிநாராயணன் உக்கிராண அறையைப் பூட்டி ஒருதடவை இழுத்துப் பார்த்துக் கொண்டான். தங்கைக்குக் கல்யாணம். இரண்டு தங்கைகள், ஒரு தம்பி, மூத்த தங்கைக்கு இன்று கல்யாணம். அறைக்குள், லட்டுவும், ஜிலேபியும், பருப்புத் தேங்காயும், தேன் குழலும், முறுக்கும், வாழையிலையும், கற்கண்டும், முந்திரிப் பருப்புமாய்ச் சாமான்கள் இறங்கியிருந்தன. இனிமேல் தான் ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும். சமையற்காரர்கள் வந்து விட்டார்கள். பண்டங்கள் விற்கிற விலைக்கு எதுவும் காணுமல் போனல் அப்புறம் யாரையும் சொல்லிப் பிரயோஜனம் இல்லே.

பெட்டி படுக்கைகள் வராந்தாவில் இறங்கியிருந்தன. காவலாய்ப், பக்கத்திலேயே அப்பா உட்கார்ந்திருந்தார். அப்பாவை நம்பி இந்த மாதிரியான வேலைகளைத் தான் விட முடிகிறது. உடல்ரீதியான வேலைகள். லக்ஷ்மிநாராயணனின் அப்பா ரொம்ப சாது. அசட்டு விளிம்பைத் தொடுகிற சாது. வீட்டின் ஓங்கிய குரல் அம்மாவுடையது. சர்வமும் தன்னுல் நடக்கிற மாதிரியொரு பெருமை அம்மா முகத்தில் எப்போதும் இருக்கிறது. அப்பா வாயைத் திறக்கிற போதெல்லாம், தங்கைகள் மூக்கை அறுப்பார்கள். வீட்டின் நகைச்சுவைகள் அப்பாவைச் சுற்றியே நிகழ்கிறது. இத்தனைக்கும் அவர் இன்னமும் ரிடையர் ஆகவில்லே. இவ்வளவு செலவுக்கும் அஸ்திவாரம் அப்பாதான். ஆனுல் சாது. அசடு. பெட்டி, படுக்கைகளைக் காவல் காக்கிற வேலைக்குத் தான் லாயக்கு.

சுந்தர், மண்டபத்துக்கு வெளியே கொஞ்சம் ஒதுங்கி சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தான். லக்ஷ்மிநாராயணனின் தம்பி. எதிலும் இதுவரை அவன் நிரந்தரமாய் இருந்ததில்லே. இந்தக் கல்யாணத்தில் சுந்தரின் பங்கு கணிசமானது. மாப்பிள்ளை வீட்டாருக்கு, மற்றும் உறவினர்களுக்கு டிரெய்ன் டிக்கெட் வாங்குவது, மண்டபம் தேடி அட்வான்ஸ் கொடுத்தது, பாத்திரப்பெட்டிகளுக்குப் பெயிண்ட் அடித்தது. ஜானவாசத்துக்குக் கார் பிடித்தது, வாங்கிய டிக்கெட்டுகளைக் கேன்சல் செய்து, மீண்டும் வேறு தேதிகளுக்கு வாங்கியது என சுந்தர் நிறைய உதவியாக இருந்தான். ஆனுல் பொறுப்பு போதாது. கமிஷன் அடிக்காமல் ஒரு காரியம் செய்ய மாட்டான். இந்தக் கல்யாணத்தில் சுந்தருடைய பெட்டிக் கடைக் கடன்கள் யாவும் அடைக்கப்பட்டுவிட்டன.

லக்ஷ்மிநாராயணன் கண்ணுடியைக் கடக்கும் போது நின்று கண்ணுடியில் பார்த்துக் கொண்டான். முப்பத்து மூன்று வயதிற்கு நிறையவே வழுக்கை விழுந்திருந்தது. சருமம் சற்றே வறண்டாற்போலாகிவிட்டது. உதட்டு மேலே இருபுறமும் கிழக்கோடு விழுந்து விட்டது. இன்னமும் ஒரு தங்கை இருக்கிறுள். இத்தனை வருஷம் சர்வீஸ் போட்டதில் இப்போதுதான் சம்பளம் சொல்லிக் கொள்கிற மாதிரி வருகிறது. கையோடு இரண்டாமவளுக்கும் மாப்பிள்ளை பார்த்துவிட்டால் லக்ஷ்மிநாராயணன் வழுக்கையும், மூக்குக் கண்ணுடியுமாகக் கல்யாணத்துக்குத் தயார்தான்.

''வேற சட்டை மாட்டிக்கோயேண்டா'' என்றுள் அம்மா.



"ப்ச்."

"அப்பா வாசல்லே இருக்காரா?"

"உம்."

"டிபன் ரெடியாமா?"

"ஆயிண்டிருக்கு."

"மாப்பிள்ளையாத்துக்காராளுக்குக் கார் போயாச்சா?"

"ஆச்சு."

"நாதஸ்வரக்காரா வந்தாச்சா?" என்றாள் அம்மா.

"வருவா" என்றான் லக்ஷ்மிநாராயணன். மனத்திற்குள் அதைரியமாய் இருந்தது. பயம். புரியாத பயம். எல்லாப் பொறுப்பும் தனியாய்ச் சுமக்கிற பயம். இது வீட்டின் முதல் விசேஷம். நல்லபடியாய் நடக்க வேண்டும்

பிள்ளை வீட்டுக்காரர்கள் வந்தார்கள். எவர்சில்வர் வாளிகளில் காப்பி சாப்பிட்டார்கள். குழந்தைகளுக்குப் பால், காய்ச்சிய தண்ணீர், சர்க்கரைக்காரர்களுக்குச் சர்க்கரை இல்லாத காப்பி என்று சூழ்நிலை பரபரப்படைந்திருந்தது. லக்ஷ்மிநாராயணன் டிபனுக்கு வரும்படி ஒவ்வொருவராய்க் கெஞ்சிக் கொண்டிருந்தான். அப்பா, மாப்பிள்ளையைப் பார்க்கும் ஆசையில் கீழேயே நின்றிருந்தார்.

"ரூமைப் பூட்டிட்டிபோனேளா?" என்றான் லக்ஷ்மிநாராயணன்.

"இல்லே. பார்த்துக்கச் சொல்லியிருக்கேன்," என்றார் அப்பா.

"யாருகிட்டே?"

"விசாலத்துப் பிள்ளைகிட்டே."

"அந்தப் பொடியன் கிட்டேயா? சட். உனக்குப் போறவே போறுதுப்பா. சட்னு கிளம்பி உடனே மாடிக்குப் போ."

மாப்பிள்ளை வீட்டார்கள் டிபன் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பக்கத்தில் பளிச்சென்று தாவணி போட்டுக் கொண்டு ஒருபெண் வந்திருக்கிறாள். லக்ஷ்மிநாராயணனுக்கு அவளைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போல இருந்தது. சமீப காலத்தில் இத்தனை அழகில் யாரையும் பார்த்த மாதிரி ஞாபகமில்லை: கையலம்பப் போகிற வழியில் அந்தப் பெண்ணும் அவனைப்பார்த்தாள். "காப்பி ரொம்ப சுமார்தான் மாமா" என்று கடக்கும்போது சொல்லிப் போனாள்.

பூக்காரன் வந்துவிட்டான். போட்டோகிராபர் அட்வான்ஸ் வாங்கிய அன்று பார்த்ததுதான். ஞாபகமாய் வரவேண்டும். ஞானவாசத்துக்குக் கோவிலில் சொல்ல வேண்டும். டிப்போவில் பால் வந்திருக்கும். வாங்கி வரவேண்டும். சுந்தரால் சமாத்.

துக்குக் காணாமல் போய்விட முடிகிறது. மல்லிகைப்பூவைப் பார்த்ததும் பெண்கள் அலங்காரத்தை ஆரம்பித்தார்கள். மாடிப் படி வளைவில அந்தத் தாவணிப் பெண் மென்மையாய் உரசிப் போனாள். லக்ஷ்மி நாராயணனுக்கு ரொம்ப நேரத்துக்கு மிதக்கிற மாதிரியிருந்தது.

ஜானவாசத்துக்குக் கிளம்புகிற நேரத்தில் விசு பெரியப்பா, டாக்சியில் இருந்து இறங்கினார். லக்ஷ்மிநாராயணன் பெட்டியைத் தூக்கிக் கொள்ள ஓடினான்.

விசு பெரியப்பா இந்தக் கல்யாணத்துக்கு இருபதாயிரம் ரூபாய் கொடுத்திருக்கிறார். அவரை இந்தக் களேபரத்திலும் பிரத்யேகமாய்க் கவனிக்க வேண்டும். பெரிய கம்பெனி டைரக்டர். நினைத்தால் ஹோட்டலில் இறங்கியிருக்கலாம். ஆனால் விசு பெரியப்பாவுக்கு மனிதர்கள் வேண்டும். அவர் வெளிநாடு போய்த் திரும்புகிற போது எல்லாம் லக்ஷ்மிநாராயணனுக்கும் மறக்காமல் ஏதாவது வாங்கி வந்திருக்கிறார்.

ஜானவாசம் நடந்து பெண்ணையும், மாப்பிள்ளையையும் காரில் சேர்த்து உட்கார்த்தி வைத்துப் போட்டோ எடுத்து, அப்பா பஞ்சகச்சத்துக்கு மாறி, நிச்சயதார்த்தம் நடக்கும் வரை நேரம் ஓடிவிட்டது. அப்புறம் சாப்பாடு முடிந்து, சத்திரம் அடங்க பதினொரு மணி ஆனது. அதிகாலை முகூர்த்தம். சமையற்கட்டில் மட்டும் இந்நேரத்துக்கு வண்டி முட்டைகோஸைப் பொடிப் பொடியாய் நறுக்கிக் கொண்டிருந்தார்கள். மாடியில் மருதாணிக் கூத்துத் தொடரில் மூன்றாவது நாளாக லக்ஷ்மிநாராயணனின் விதவை அத்தை எல்லோருக்கும் மனம் கோணிக் கொள்ளாமல் மருதாணி இட்டுக் கொண்டிருந்தாள். உக்கிராண அறையிலிருந்து நிறையப் பொருட்கள் தேவைப்பட்டுக் கொண்டிருந்தது. தூங்கலாம் எனத் தீர்மானிப்பதற்கு ஒரு மணி ஆனது. மண்டபத்தின் திருமணக் கூடத்தில் விசு பெரியப்பா, கம்பெனிகளையும், போர்ட் மீட்டிங்குகளையும் மறந்து ஃபேனுக்கு நேரே வெறும் தரையின் விரித்த துண்டில் கால் அகட்டித் தூங்கிக் கொண்டு இருந்தார். லக்ஷ்மிநாராயணன் கொஞ்சம் நேரம் தூங்கினான். அதற்குள் கனவில் அந்தத் தாவணிப் பெண் வந்து விட்டாள். லக்ஷ்மிநாராயணன் அவள் அருகே போய் அமர்ந்தான். மண்டபத்தின் பூட்டிய கேட்டை யாரோ உலுக்கினார்கள். சுந்தர். நைட்ஷோ.

பால் டிப்போவில் கண் எரிந்தது. பயங்கரமாய் பனி கொட்டிக் கொண்டிருந்தது. வாயைத் திறந்தால் புகை. பால் கேன்களின் டண் டணார். காலை நேரத்துக் காக்காய்கள். நல்லபடியாய் முகூர்த்தம் முடிந்ததும் ஒரு மணி நேரமாவது தூங்க வேண்டும். மண்டபம் மீண்டும் காப்பி வாசனையுடன், தனது நாளைத் தொடங்கியது. விழித்த சுருக்கில் காசி யாத்திரை, மாப்பிள்ளைக் கெஞ்சல், ஜோடித்த ஊஞ்சல் என்று காலின் கீழ் கலர் சாதம் மிதிபட்டது. மூத்தவள் அழகாய் இருந்தாள். எல்லாக் கஷ்டமும் அவள் முகத்தில் தெரிகிற இந்தச் சிரிப்புக்காகத்தான். லக்ஷ்மி நாராயணன் கொஞ்சம் எட்டிப் பார்த்து விட்டு மீண்டும் உக்கிராண அறையில் நுழைந்தான். செலவுக் கணக்கை டைரியில் எழுதிக் கொண்டிருந்தபோது வாயிற்படியில் நிழலாடியது. அந்தத் தாவணிப் பெண்.

''என்ன வேணும்?'' என்றான் லக்ஷ்மி நாராயணன்.

''நீங்க கொஞ்சம் வெளிலே இருக்கேளா? புடவை கட்டிக்கணும்.''

''உம்.'' பற்பல யூகங்களுடன் லக்ஷ்மி நாராயணன் வெளியில் நின்றுகொண்டிருந்தான்.

''ரொம்ப தேங்க்ஸ் மாமா'' என்று கலைத்தாள். புடவையில் இன்னும் அழகாய் இருந்தாள்.

கல்யாணம் நடந்தது. பானகம் குடித்தார்கள். இரண்டாம் தங்கை பட்டுப்புடவையில் ரொம்ப அலட்டிக் கொண்டிருந்தாள். சுந்தர் மக்காய் சட்டையை உள்ளே செருகி, பெண்கள் கண்களில் விழப் பிரயத்தனங்கள் செய்து கொண்டிருந்தான். அப்பா ரொம்பவும் சந்தோஷமாய் இருந்தார். இந்தக் கல்யாணம் அவரது தனிப்பட்ட வெற்றி. இதற்காக அவர் வெளிப்படையாகக் கவலைப்படவில்லைதான். பொறுப்பாய் நாலு காரியம் செய்யவில்லைதான். ஆனால் இது அவர் பணத்தில் நடக்கிற கல்யாணம். கடன் பணம் உண்டுதான். ஆனால் அதைக் கண்டிப்பாய் அவரே அடைப்பார். ஆயுசு மட்டும்தான் வேண்டும். வேண்டிய பணம் சம்பாதித்துக் கொள்ளலாம். அவருடைய இரண்டு பெண்களும் அவரை மதிப்பதே கிடையாது. எல்லாவற்றுக்கும் இரண்டும் அம்மாவைக் கொண்டிருக்கிறது. ஆனால் இந்தக் காலத்தில் எல்லாப் பெண்களும் இப்படித்தான் இருக்கின்றன. புதிதாய்க் கிடைத்த சுதந்திரம், படிக்கிற பத்திரிகை பார்க்கிற உத்தியோகம், பழகுகிற வெளியுலகம், புதிய கருத்துக்கள், தைரியம், எதிர்ப்பு. வரதட்சிணை வாங்குகிற இளைஞர்களைப் பற்றிய தாக்குதல்கள். அப்பா இளைஞரில்லை. வரதட்சிணை வாங்குகிறவரும் இல்லை. அவர் அசடாய் இருக்கலாம். ஆனால் இந்தக் கல்யாணத்தில் வரதட்சிணை கொடுக்கிற ஆண்.

லக்ஷ்மிநாராயணன் ஆசீர்வாதப் பணத்தைக் கணக்கெழுதி, சரி பார்த்தான். இரண்டாயிரம் ரூபாயாவது வரும் என்று எதிர்பார்த்ததற்கு, ஆயிரத்து எண்ணூறுதான் தேறியது. விசு பெரியப்பாதான் அதிகம் ஆசீர்வாதம். ஐநூற்றொரு ரூபாய். விசு பெரியப்பா ரொம்ப நல்லவர். சுயமாய் முன்னுக்கு வந்தவர். தன் மூன்று சகோதரிகளுக்காகக் கல்யாணத்தைத் தள்ளிப் போட்டவர். தாத்தா, பெரியப்பாவுக்கு ஐம்பதினாயிரம் கடன் வைத்துப் போனார். ஆனால் லட்சம், லட்சம் ரூபாய்க்குத் தன் பெண்களுக்குக் கல்யாணம் செய்து வைத்தார். லக்ஷ்மிநாரா

# ஆயிரத்தில் ஒருத்தியாம் உங்கள்அன்பு மகள்-
# ஆயிரத்தில் ஒருவரைத் தேர்ந்தெடுப்பீர் அவளுக்கு





## மனம்விரும்பும்
## தேர்வுக்குவழிவகுக்கிறது 'டைம்ஸ்'-
## அதை, 8,09,000 திருமணம் எதிர் நோக்கும் மணமகன்களும் அவர்களின் பெற்றோரும் வாசிக்கிறார்கள் என்பது உங்களுக்கு மகிழ்ச்சி தருகிறதல்லவா?

எதையுமே தேர்ந்தெடுக்கும் குணம் படைத்தவள் உங்கள் மகள்... ஆம்! அவள் ஆயிரத்தில் ஒருத்தி. அவளுக்கு மாப்பிள்ளை —ஆயிரத்தில் ஒருவரைத்தானே தேர்ந்தெடுக்க வேண்டும். அத்தகைய விரிவான தேர்வுக்கு சிறப்பாக வழி செய்கிறது டைம்ஸ் ஆஃப் இந்தியா—அதிலே விளம்பரம் செய்யும்போது வெற்றி அடையும் உங்கள் லட்சியம். அது பல லட்சம் பேர் படிப்பது... அதன் வாசகர் நாடு பரவியுள்ளனர் என்பது மட்டுமல்ல—அவர்கள் நல்ல நிலையிலும் உள்ளனர்.

ஆகவே டைம்ஸ் ஆஃப் இந்தியாவின் திருமணப் பத்திகளில் விளம்பரம் செய்திடுங்கள்—உங்கள் திருவளர் செல்விக்கு விரிவான மாப்பிள்ளைத் தேர்வு வாய்ப்பினைத் தாருங்கள்.

THE TIMES OF INDIA

ACIL-BC-38/85.A-Tam



# மயிரிழையில் தப்பினேன்!

**போட்டி: 50**

உங்கள் வாழ்க்கையில் தெய்வாதீனமாகப் பேராபத்திலிருந்து மயிரிழையில் தப்பி மெய் சிலிர்த்த அனுபவம் ஏதும் இருக்குமே. அதைக் கீழே எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப் புடவை. உறையின்மேல் ''மயிரிழையில்தப்பினேன்'' என்று குறிப்பிடவும்.

**முடிவு தேதி: 29.4.85**

**இன்னும் 3 பட்டுப்புடவைகளே பாக்கி. இந்தக் கடைசி சில வாய்ப்புக்களைக் கைநழுவ விடாதீர்கள்!**

## பட்டுப்புடவை பரிசுத்திட்டம்

என் பெயர்: ..........................

விலாசம்: ..........................

..........................

யணன் அப்பாவும் பெண்களுக்கான கடமைகளைச்செய்துவிடுவார். சுந்தருக்குவேலை கிடைக்கவில்லையென்றால் அது அவன் பாடு. பெண்களுக்குக் கல்யாணம் செய்துவிடு, பிள்ளைகளுக்குக் கடனை விட்டுவை. இந்தக் கல்யாணத்திற்கு லக்ஷ்மிநாராயணன் பணமாகச் செய்திருக்கிறான். சரீரம் வியர்க்க வியர்க்க உழைத்திருக்கிறான். இன்னும் ஒரு தங்கை இருக்கிறாள். அவள் அந்தக் கல்யாணம் வரை காத்திருக்க வேண்டும். லக்ஷ்மிநாராயணன் காத்திருப்பான். அவன் பொறுப்புள்ளவன். இந்தக் கல்யாணத்தில் வரதட்சிணை கொடுக்கிற ஆண்.

நலங்கு ஆரம்பமானது. மூத்தவள் இப்போது பாலியெஸ்டர் புடவையில் இருந்தாள். மாப்பிள்ளை நீலக்கலரில் ஜிப்பாப் போட்டிருந்தார். இருவரையும் சேர்ந்து பார்ப்பதற்குச் சந்தோஷமாய் இருந்தது. இப்படித்தான் இருக்க வேண்டும். இவர்கள் தான் நலங்கு விளையாட வேண்டும். பரஸ்பர சீண்டல்கள் நலங்கில் துவங்குகின்றன. லக்ஷ்மிநாராயணன் கல்யாணத்தில் நலங்கு இருக்காது. இந்தளை முத்திப் போன முகத்துடன் நலங்கில் உட்காருவது யாருக்கும் ரசிக்காது.

ரிஸப்ஷனுக்காக ஐஸ் வந்து இறங்கியது. அதை உள்ளே போய் அண்டாவில் போடுவதற்குள் வேட்டி, சட்டையெல்லாம் மரத்தூள் ஒட்டிக் கொண்டது. அந்தத் தாவணிப் பெண் இப்போது சூடிதார், கமீஸ்போட்டுக் கொண்டு வரவேற்பில் நின்றிருந்தாள். போட்டோகிராபரிடம் சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாள். அவளைத் தனியாக நிற்க வைத்து ஒரு போட்டோ எடுக்கப் பட்டது. அந்தப் போட்டோவுக்கு விலையாகத்தானே அந்தச் சிரிப்பு? லக்ஷ்மிநாராயணனுக்கு சூடிதார்களைப் புரியாது. மத்தியில் ஒரு தலைமுறை இருக்கிறது. சுந்தரைக் கூட அவனுக்குப்புரியாது. சுந்தரின் பொறுப்பில்லாமை புரியாது. ஒரு பேண்டும், ஒரு சட்டையும் அயார்ன் செய்து வைக்க லக்ஷ்மிநாராயணன், சுந்தரிடம் சொல்லியிருந்தான். ரிஸப்ஷனில்கொஞ்சம் பளிச்சென்று இருக்க வேண்டும். அம்மா அறுகஜப் புடவையில் இருந்தாள். அப்பா மலர்ந்த இருப்தியும், கலையாத மடிப்பும் அணிந்திருந்தார். சுந்தரைக் காணோம். அவன் நிச்சயம் பேண்ட் சட்டையை அயார்ன் செய்திருக்கப் போவதில்லை. விசு பெரியப்பா முதல் வரிசை நாற்காலியொன்றில் அமர்ந்து, ரிஸப்ஷனின் ஆரம்ப ஆலாபனைகளில் ஆழ்ந்திருந்தார். இரண்டாம் தங்கை அழகு நிலையத்தில் அக்காளுடன் புருவம் திருத்தியிருந்தாள். அத்திம்பேருடன் அறுவை ஜோக்குகள் பகிர்ந்து கொண்டாள். நிறைய கூல்டிரிங்க் குடித்தாள். இந்தக் கல்யாணத்தில் அவளுக்கு மூன்று ஜாதகங்கள் வந்திருக்கின்றன. கையோடு அவளுக்குக் கல்யாணத்தைச் செய்துவிட வேண்டும்.

லக்ஷ்மிநாராயணன் அப்புறமும் அதே கசங்கிய வேட்டியும், சட்டையுமாகத்தான் இருந்தான்.

**விடுமுறையின் உல்லாசத்தை அதிகரிக்க...**

**கோடையின் வெப்பம் தணிய...**

**வண்ணக் களஞ்சியமாக உருவாகிறது!**

**மே முதல் வாரம் எங்கும் கிடைக்கும்!**

* இரண்டு குறுநாவல்கள்
* ஏராளமான சிறுகதைகள்
* பயணக் கட்டுரைகள்
* வண்ணப் புகைப்படங்கள்
* நகைச்சுவைக் குவியல்கள்
* கவிதைகள்
* பாப்பா மலர்
* மற்றும் ரசமான சிறப்பு அம்சங்கள்




**இந்தியாவையும் அயல் நாடுகளையும் உட்கார்ந்த இடத்திலிருந்தே சுற்றிவர ஓர் அரிய வாய்ப்பு!**

# கல்கி

# விடுமுறை மலர். 1985

உடன் ஏஜெண்டிடம் பதிவுசெய்து கொள்ளுங்கள்

320 பக்கங்கள் ★ விலை ரூ. 10 ★ பதிவுத் தபாலில் அனுப்ப ரூ. 3-50.




# ஆகாச

## முன் கதைச் சுருக்கம்

வசுமதி: பிரபலவக்கீல்கே.ஜி.கே.யின் ஜூனியர். மத்தியதர வகுப்பைச் சேர்ந்த சதாசிவம் — சாரதா தம்பதிகளின் கல்யாணமாகாத மூன்று பெண்களில் ஒருத்தி. அரவிந்தனின் காதலியாய் இருந்து, கே.ஜி.கே.யின் வற்புறுத்தலின் பேரில் அவனைக் கைவிட்டவள்.

அரவிந்தன்: பிரபல தனியார் நிறுவனத்தில் நல்ல வேலையில் இருப்பவன். ஃபாரின் ரிடர்ன். சிறு வயதிலேயே அப்பாவை இழந்து, இப்போது அம்மாவும் காலமான பிறகு ஒண்டிக்கட்டையாய் வாழ்பவன். வசுவை மிகவும் நேசித்தாலும், அவளே அவனைக் கைவிட்டதால் மாயாவின் பக்கம் மனத்தைத் திருப்புகிறான்.

தாரக்ராம்: அரவிந்தனின் அப்பாவுக்கும் தனக்கும் இருந்த சிநேகிதத்தை உத்தேசித்து, நண்பரின் மறைவுக்குப் பிறகு அரவிந்தனைப் படிக்க வைத்துத் தன் கம்பெனியிலேயே சேர்த்துக் கொண்டவர். மனைவியைக் கான்ஸருக்குப் பறி கொடுத்தவர். ஒரே மகள் மாயாவை எப்படியாவது அரவிந்தனுக்குக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும் என்று துணிந்து கே.ஜி.கே.விடம் பேசி வசுமதி — அரவிந்தன் காதலைக் கலைக்கச் செய்தவர்.

மாயா: சில நேரங்களில் மட்டுமே 'நார்மலுக்குத் திரும்பும் மன நோயாளி. விசுவாசமுள்ள சமையல்காரி ராஜம்மாவின் பராமரிப்பில், பம்பாயில் அப்பாவின் செல்ல மகளாக வளர்பவள். அரவிந்தன் தன்னைக் காண வந்த போது மிகப் பரிவாகவும், அன்புடனும் நடந்து கொள்வது அவளை ஈர்த்து விடுகிறது.

மாயாவைக் காண பம்பாய்க்கு செல்லும் அரவிந்தன் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்

மதிக்கிறான் — மூன்று நிபந்தனைகளின் பேரில். 1) எளிமையாய் கோயிலில் கல்யாணம் நடக்க வேண்டும். 2) கல்யாணத்திற்கு பிறகு ராஜுவோ, தாரக்ராமோ மாயாவை (சென்னைக்கு வந்து) பார்க்கவே கூடாது. 3) மாயா குணமடையாவிட்டால் அவளை மனநோய் மருத்துவ மனையில் சேர்த்து விட்டுத்தான் வேறு கல்யாணம் செய்து கொள்வான்.

முதலில் அதிர்ந்து போன தாரக்ராம் வேறு வழியின்றி நிபந்தனைகளுக்கு ஒப்புக் கொள்ள, சென்னை திரும்புகிறான் அரவிந்தன்.

## 14

அரவிந்தன் தாரக்ராமின் நிலைமை குறித்துப் பரிதாபப்படவில்லை. தம்முடைய நெடு நாள் திட்டத்தின் வெற்றியை அவர் அனுபவிக்க அவன் விடவில்லை. அவனைப் படிக்க வைத்தார். தம் சொந்த நிறுவனத்தில் சிறந்த பதவியும் கை நிறையச் சம்பளமும் அளித்தார். இதெல்லாம் எதிர்காலத் திட்ட வெற்றிக்குச் சாதனங்களாகவே அவர் எண்ணியிருக்கிறார். . . . ஏழாண்டுகள் கம்பெனியில் தொடர்ந்து அவன் பணி புரிய வேண்டும் என்ற ஷரத்தின் உள் நோக்கம் அப்போது அரவிந்தனுக்குப் புரியவில்லை.

இப்போது எல்லாம் நிதர்சனமாகப் புரிந்த போது, அவனுக்கு நியாயமாக வர வேண்டிய கோபம் வந்தது.

இப்போது அவனுடைய கையில் சாட்டை இருந்தது. அதை ஓங்காமலேயே அவரை அடித்து விட்டான். எந்த இடத்தைத் தொட்டால் அவருக்கு நிச்சயமான வலி உண்டாகுமோ அந்த இடத்தைத்தாக்கிவிட்டான்.

அவருக்கு உயிருக்குயிரான பெண் மாயாவை அவர் எப்படியும் பார்க்கக் கூடாது. இந்த நிபந்தனை அவரை வெகுவாகத் தாக்கியிருக்கிறது என்பதை முக பாவத்திலிருந்தும் பேச்சிலிருந்தும் தெரிந்து கொண்டான் அவன்.

அரவிந்தன் மெதுவாக எழுந்து, மெல்ல நடந்து மாயாவின் அறையை நோக்கிச் செல்லுகையில் தாரக்ராம் மீது பரிவு காட்ட வேண்டிய அவசியமே இல்லை என்று நினைத்தான். தாரக்ராம் ஒரு சுயநலக்காரர். தம் எண்ணம் நிறைவேற மனச்சாட்சியைத் தனியாக எடுத்து ஆணியில் மாட்டி விடவும் தயாராக இருப்பவர். இப்படிப்பட்டவர் மீது அரவிந்தன் ஏன் பரிவும், பச்சாத்தாபமும் கொள்ள வேண்டும்?

அவன் மாயாவின் அறையை அடைந்தான்.

இரு தலையணைகள் மீது சாய்ந்தவளாய், கால்களை நீட்டிக் கொண்டு மடியில் ஆல்பத்தைப் பிரித்து வைத்து, ஒரு போட்டோவை ஊடுருவிப் பார்த்துக் கொண்டிருந்த மாயாவை வைத்த விழி எடுக்காமல் பார்த்து நின்றான்.

மாயா அவன் வந்து சில அடிகள் தூர நின்று தன்னையே கவனிப்பதை உணரவில்லை. ஒரு போட்டோவையே இன்னும் அலசிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அரவிந்தன் அவளைப் பக்கவாட்டிலிருந்து பார்த்தான். அவளுடைய தங்க நிறம், கண்களை அள்ளியது. ஒரு தங்கச் சிலையாகக் காட்சி அளித்த அவள் அவன் கண்களுக்கு ஒரு சாதாரண பெண் உருவமாகத் தோன்றவில்லை. வசுமதி ஒரு அழகி. ஆனால் மானிட அழகு. தோலும், சதையும் கண்களைத்தான் தொட்டு மனத்தை விகாரமாக்கின. இவளுடைய அழகு வெறும் பெண்ணின் அழகாகத் தோன்றவில்லை. பெண்மையின் தெய்வீக இலக்கணமாகத் தோன்றி, இலக்கியக் காவியமாக மனத்தைத் தொட்டது. இப்படிப்பட்ட தெய்வீகத்தின் மூளை மட்டும் ஏன் பாதிக்கப்பட்டிருக்கிறது?

நீண்ட நேரம் நின்று யோசித்ததில், பதில் அவ்வளவு சீக்கிரம் கிடைத்துவிடாது என்று தோன்றியது.

''மாயா!'' — தாழ்ந்த குரலில், மென்மையான ஒலியில் அழைத்தான்.

மாயா திரும்பினாள்.

ஒருதடவை ஏற இறங்கப் பார்த்தாள். கண்கள் கனலைக் கக்கின. உடல் ஆவேசத்தில் நடுங்கியது.

மறுகணம் கையிலிருந்த ஆல்பத்தை அரவிந்தன் மீது வீசினாள். அவன் அம்பாகப் பாய்ந்து வரும் புத்தகத்தைக் கைகளினால் தடுப்பதற்குள் முகத்தில் அது அறைந்து விட்டது. ஒரு முனை நெற்றியில் பட, இன்னொரு முனை தாடையில் இடிக்க, முகமே வலியில் துவண்டது.

வலியையும் மறந்து குனிந்து ஆல்பத்தை எடுத்தான். பிறகு மெல்ல முன்னேறி, அவளருகே வந்தான். நீட்டினான்.

வாங்கிக் கொண்ட அவள் மீண்டும் அவனை ஏற இறங்கப் பார்த்தாள்.

''இன்னொரு வாட்டி எறியணும்னு எறி, மாயா!''

''உனக்கு வலிக்கலே?'' — மாயா.

''இல்லே!''

''ஏன்?''

''நீ எறிஞ்சே... அதனாலே வலிக்கலே..''

''நீ தானே அந்து... அரவிந்தன்... இதோ இங்கே இருக்கிறவன்?'' ஆல்பத்தில் விரலை வைத்துக் குறிப்பிட்டாள்.

''யெஸ்''.

''மெட்ராஸ்லேந்து வந்திருக்க இல்லே?''

''ஆமாம்.''

''என்னைக் கலியாணம் பண்ணிக்க வந்திருக்க இல்லே?''

''ஆமாம், மாயா.''

''உலகத்திலே லட்சக்கணக்கா பெண்கள்

இருக்கிறப்போ, நீ ஏன் இங்கே வந்து என்னைப் பண்ணிக்கணும்? மெட்ராஸ்லே பெண்ணே இல்லியா?''

''இருக்கா... ஆனா எனக்கு உன்னைத்தான் பிடிச்சிருக்கு...''

''நான் ஒரு மென்ட்டல் கேஸ்... தெரியுமோ?''

''நீ ஒண்ணும் மென்ட்டல் கேஸ் இல்லே.. எல்லார் மாதிரியும் நீயும் ஒரு பெண்...''

''என்னைப் பத்தி என் டாடி ஒண்ணும் சொல்லலியா? நான் மென்ட்டல் கேஸ்... பயப்படுவேன்... பயமே இல்லாம நட்ட நடு ராத்திரியிலே காரை எடுத்துட்டு நாரிமன் பாயிண்ட் வரை நூறு கிலோ மீட்டர் வேகத்தில் போய்ட்டு வருவேன்... சிரிச்சா சிரிச்சுண்டே இருப்பேன்... அழுதா அழுதுண்டே இருப்பேன்... ஒருத்தன் மெட்ரோ தியேட்டர் வாசல்லே என் தோள் மேலே இடிச்சான்... அவனை நான் என் செருப்பாலே அடிச்சேன்... கீழே விழுந்தான்... ஒரு நாள், ராஜம்மா என்ன செய்தா தெரியுமா? சாதம் வடிக்கிறது எப்படின்னு சொல்லித் தந்தா... இது ரொம்ப ஈஸின்னு பாதியிலேயே கிச்சனை விட்டு வந்துட்டேன். நான் ஒரு மென்ட்டல் கேஸ்... உன் பேர் என்ன சொன்னே?''

''அரவிந்தன்.''

''மெட்ரோவிலே என் தோளை இடிச்சவன் நீ இல்லியே?''

''சத்தியமா நான் இல்லே.''

''இப்ப என்ன வேணும்னு வந்திருக்கே... இது என் பெட்ரூம்.''

''தெரியும்!'' என்றான் அரவிந்தன்.

''ஒரு பெண்ணோட பெட்ரூமுக்கு ஒரு ஃபெலோ வர்றான்னா எதுக்கு? எதுக்கு வருவான்?''

''நான்... நான் அதுக்கு வரலே...''

''என்னைத் தொட்டே நான் உன்னைக் கிழிச்சுப்பிடுவேன்... அஞ்சாறு வருஷம் முன்னாடி என்ன நடந்தது தெரியுமா...? என்ன நடந்தது? நீ சொல்லு, என்ன நடந்தது... சீ, ஞாபகம் வரலே... ராஜம்மா! ராஜம்மா...

''என்ன நடந்தா என்ன மாயா? நான் இப்ப உங்கிட்டே சொல்லிட்டுப் போலாம்னு தான் வந்தேன். நான் போயிட்டு வரேன்..''

''சரி. போயிட்டு வா.''

''உனக்கு என்ன பிடிக்கும், மாயா?''

''என்ன பிடிச்சா உனக்கு என்ன? நுங்கு பிடிக்கும்... கேன் ஜூஸ் பிடிக்கும்... ஃப்ரூட் சாலட் பிடிக்கும்... எனக்கு என்ன பிடிச்சா உனக்கு என்ன?''

''உனக்கு பிடிக்கறதெல்லாம் எனக்கும் பிடிக்கும், மாயா! நான் வரேன்... டாடா... பைபை.''

அவன் நகர்ந்தான்.

''ஏய்!''

''என்ன மாயா?''

''என்னைக் கலியாணம் பண்ணிக்காதே... அவஸ்தைப்படுவே... நான் ஒரு மென்ட்டல் கேஸ்... ஒரு டாக்டர் வாராவாரம் பார்த்துட்டுப் போறான்... அப்பா ஏதோ பொய் சொல்லி உன்னை ஏமாத்தறார்.''

''அப்பா நல்லவர் மாயா... ஏமாத்தலே.. நீ மென்ட்டல் கேஸ் இல்லே... நான் அவஸ்தைப்படமாட்டேன்... யூ ஆர் கோயிங் டு பி மை ஒய்ஃப்...''

''தென் இட் இஸ் ஓகே... யு கேன் கோ!''

அரவிந்தன் மறுபடியும் நகர்ந்தான்.

''மூஞ்சி வலிக்கறதா?''

''இல்லே...''

''நான் தூக்கி உன் மூஞ்சிலே எறிஞ்சுமா வலிக்கலே.''

''வேற யாராவது எறிஞ்சிருந்தா வலிச்சிருக்கும். மாயா எறிஞ்சா. அதனாலே வலிக்கலே!''

''ஐ லைக் யு... வாட் இஸ் யுவர் நேம்... ஹங்... ஹங்... அந்து... யெஸ் அந்து...''

மாயா சிரிக்க ஆரம்பித்தாள்.

அரவிந்தன் வெளியேறினான்.

* * * * * *

ராஜம்மா சமையலறையில் சுவரில் சாய்ந்தவளாய் உட்கார்ந்து, பக்த விஜயம் படித்துக் கொண்டிருந்தாள். திடீரென ஒரு உருவம் நிழலாட, ஏறிட்டுப் பார்த்தாள். தாரக்ராம். வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள்.

''ஏதானும் வேணுமா?''

''நான் நெனைச்சபடி நடக்காது போலிருக்கு, ராஜம்மா?''

அவரைப் பார்க்காமல், கையிலிருக்கும் புத்தகத்தை சுருட்டிக் கொண்டு, ''அவன் தான் சம்மதம் தெரிவிச்சுட்டானே...!'' என்றாள்.

''ஆனா ரெண்டு கண்டிஷன் போடறான்... ஒண்ணை எளிசா சமாளிச்சுடுவேன்... ஆனா இன்னொண்ணைத்தான் என்னாலே தீரணிக்க முடியலே.''

''ஆனா வாக்குக் கொடுத்துட்டேளே இல்லியா?''

''உங்க காதில் விழுந்ததா, ராஜம்மா?''

''தூர நின்னு கேட்டுண்டு இருந்தேன்... மாயா என் பொண்ணு மாதிரி ஆயிட்டாளே?''

''இப்ப என்ன செய்யறது?''

''நான் பார்த்துடுங்கோ... ஆள் கூட்டம் இல்லாம அவன் சொல்றபடி ஒரு சின்னக் கோவில்லே கலியாணத்தை நடத்திடுங்கோ...''

''நான் ஒரு பெரிய கம்பெனியின் உரிமையாளன்... என் பொண் கலியாணம் சீர் சிறப்பு இல்லாம...''

''இது உங்க ஐடியாதானே? இப்ப நமக்கு எது முக்கியம்? மாயாவோட கலியாணமா இல்லே உங்களோட சீர் சிறப்பா...''

''இவ்வளவு வைராக்கியமா இருப்பான்னு நான் நினைக்கலே...''

''அவனோட அப்பா எப்படி?''

''ரங்கன்தானே? ரொம்ப நல்லவன். சாது... அடிச்சா அழத் தெரியாது...''

''புள்ளையும் அப்பாவைப் போல இருப்பான்னு கணக்குப் போட்டேன் இல்லியா?''

''அது மட்டுமில்லே, ராஜம்மா. நான்

சொன்னபடி . கேட்பான், நெனைச்சபடி நடப்பான்னு நெனைச்சேன்...''

''இப்ப அவன் சொல்றபடி நீங்க நடக்க வேண்டியிருக்கு.''

''நீங்க என்ன நினைக்கிறேள்?''

''அவன் நம்ப மாயாவைக் கைவிட மாட்டான்னு படறது...''

''ரெண்டு வருஷத்தில குணமாக வேணு...''

''அவன் சும்மா உங்களை பயமுறுத்தறான்.. ரெண்டு வருஷத்துக்குள்ளே மாயாவுக்குக் குணமாயிடும்ங்கிற தைரியம். நிச்சயமா அவன் அவளை ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் விடவும் மாட்டான். அஞ்சு வருஷத்துக்கு அப்புறம் அவளைத் திருப்பி உங்ககிட்டே அனுப்பிச்சுட்டு இன்னொரு கலியாணம் பண்ணிக்கவும் மாட்டான்.''

''எப்படிச் சொல்றேள்?'' என்று தாரக்ராம் கேட்டார்.

''பேச்சிலே சுத்தம் இருக்கு. நாக்கிலே உறுதியும் நிதானமும் இருக்கு.''

''மாயாவைப் பார்க்காம உங்களாலே இருக்க முடியுமா, ராஜம்மா.''

''உங்க ஆசை உங்க பெண்ணை ஒரு நல்ல புள்ளேட்டே ஒப்படைக்கணும்னுதானே?''

''ஆமாம்.''

''அந்த ஆசை நிறைவேர்றதுன்னா, நீங்க மத்த ஆசாபாசங்களை அடக்கிண்டுதான் ஆகணும்.''

''ஒரு பைசா பணம் கூடத் தரப்படாதுங்கறானே!''

''உங்க பணபலத்தாலே மாயாவோட மனசு பலமாயிடாதுன்னு நினைக்கிறான். இதில என்ன தப்பு?''

''ஒரு வித உதவி கூட இல்லாம மாயா எப்படி மெட்ராஸ்லே தனியா இருப்பா...''

''இதைப்பத்தியெல்லாம் இப்ப யோசிச்சு மண்டையை உடைச்சுக்கறதில் என்ன புண்ணியம்? மாயாவுக்கு ஒரு வழி கிடைச்சிருக்கு. அந்த வழியில் அவளை இவன் அழைச்சுண்டு போறான்... போகட்டுமே... நிச்சயமா மாயாவுக்கு வியாதி அதிகமாகாது,'' என்றாள் ராஜம்மா.

தாரக்ராம் மௌனமாக ஹாலுக்குத் திரும்பினார். இன்னும் அரவிந்தன் மாயாவின் அறையிலிருந்து திரும்பவில்லை. எந்நேரமும் அவன் வருவான்.

தம்முடைய புகைக் குழாயை எடுத்தார். புகையிலையைப் போட்டு நிரப்பினார். லைட்டரால் பற்ற வைக்கும் தறுவாயில் அரவிந்தன் வருவது தெரிந்தது.

''வா, அந்து... மாயா எப்படி இருக்கா? நன்கு பேசினாளா?'' என்று கேட்டார்.

''நான் நைட் ஃப்ளைட்டில் மெட்ராஸ் திரும்பறேன்.''

''கார் ரெடியா இருக்கு.''

''டாக்ஸியிலே போய்க் கொள்றேன்...''

''இந்தச் செலவை கம்பெனிக் கணக்கில் எழுதி விடு... ஆராமுதனுக்கு நானே போனில் சொல்றேன்.''



''எலே... நான் உன் வயசாயிருந்தப்ப பெண்களை தலைநிமிர்ந்து கூடப் பார்த்ததில்லை. இதை நான் உன்கிட்ட சொல்றதைப் போல நீயும் உன் மகனிடம் சொல்லணும்... சொல்லியா?''

''ஸாரி டாடி... இப்படி ஒரு அப்பட்டமான பொய்யை உங்களைப் போல அவ்வளவு தைரியமா என்னாலே சொல்ல முடியாது!''

''ஸாரி சார்... இது என்னுடைய பர்ஸனல் மேட்டர். நான் பெண் பார்க்க வந்த செலவு! அந்தப் பெண் சேர்மனுடைய பெண்ணே ஆனாலும் செலவு சொந்தச் செலவு தான்...

''அந்து, உன்னை என்னாலே புரிஞ்சுக்கவே முடியலே...''.

''மாயாதான் இப்ப என்னை புரிஞ்சிக்கணும்... மத்தவங்களைப் பத்தி எனக்கு அனாவசியம். நான் வரேன் சார்... நான் நிச்சயமானதும் எழுதுங்கள்... நான் தயாராகிறேன்.''

''தாங்க் யூ, அந்து.''

''என் ஸைட்லேந்து நான் ஒருவன்தான்.. ஒருவேளை என் ஃப்ரண்ட் ஒருத்தி வருவாள்.''

தாரக்ராம் வாய் திறக்கவில்லை. அந்த ஒருத்தி யார் என்று அவருக்கா தெரியாது?

அரவிந்தன் ராஜம்மாவிடமும் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

வெளியே வாக்கேஷ்வர் சாலையை அடைந்த போது பிரகாசமாக இருந்தது. ஹாங்கிங் கார்டன்ஸில் சிறிது நேரம் உட்கார்ந்துவிட்டுச் செல்லலாமா என்று யோசித்தான். நேரமிருக்காது என்று தோன்றவே காலியாக வந்த ஒரு டாக்ஸியை நிறுத்தி, ''ஹோட்டல் சென்டார்'' என்றான்.

போகும் வழியெல்லாம் மாயா வந்தாள்.

மாயா!

அவனுக்கு மனைவியாக வரப் போகிறவள்!

மண வாழ்க்கை!

எப்படி இருக்கும்?

பூ என்று நினைத்தால் அது பூ தான்.

முள் என்று நினைத்தால் அது முள்தான்.

ஏன் முள் என்று நினைக்க வேண்டும்?

திடீரென்று மனமெல்லாம் நிறைய ஒரு பூந்தோட்டமே முளைத்தது.

(தொடரும்)

# சொந்தச் சகோதரர்கள்

-இரவிச்சந்திரன்-

இமை மூடி, "புத்தம் சரணம் கச்சாமி" என்று அசோசியேட் புரொபசர் திருமதி தேவநாணி முடித்ததும், எட்டுப் பெண்களும், வயசுக்குத் தகுந்த சந்தோஷத்துடன் எழுந்தார்கள்.

"தாரிணி, மாலையில் வீட்டுக்கு வருவாயா?"

"இல்லே. பரிமளா. துவைக்கணும். எழுதணும்."

"மல்லிகா எங்கே?"

"இதோ. இருக்கேன். என்னடி?"

"பாக்யராஜ் படம் பார்த்தாய் அல்லவா. எப்படி இருக்கு?"

"கொஞ்சம் அசடாகவும், கிச்சு கிச்சு மூட்டுபவராகவும், கொஞ்சம் ஃபெமினைன் சாயல் கொண்டவராகவும் இருக்கார். அதனால் நம்ம ஜெண்ட்ருக்குப் பிடிச்சுடும். போய்ப் பார்."

காம்பவுண்ட் சுவர். தாண்டினார்கள். சாலைக்கு எதிரில் பஸ் ஸ்டேண்ட்.

"சை. ஏன்தான் லீவு நாளில், மேடம் க்ளாஸ் வைக்கிறாங்களோ?"

"மற்ற நாளிலேயே பஸ்ஸுக்கு வாணவேடிக்கை."

"அதோ, பஸ். பரிமளா."

"இல்லேயடி லாரி போல."

"அதுவும் இல்லே. மிலிடரி ட்ரக்."

"நல்ல வேளை. ஏரோப்ளேன் என்று சொல்லலை யாரும்."

"என்ன ஸ்பீடா வரான். அப்படி என்ன அவசரம்?"

"நீ சொன்னது காதில் கேட்டது போல. வேகம் குறைஞ்சிட்டதே."

ட்ரக்கில் பொலிகாளை வடிவத்தில் இருந்தவன் குண சிங்க என்ற பெயருடையவன். சிறை — சப்பள லிஸ்டில் இவனும் இருக்கிறவன். தாவணியின் வசீகரமும், புடவையின் பெண்மையும், தமிழ்ப் பெண்ணுக்கு மட்டும் சரியநளினமும் கண்டு, இதுபோன்ற சந்தர்ப்பத்துக்குக் காத்திருந்தவன் — "வண்டியை நிறுத்து" என்றான். தினராஜா என்கிற நல்லவனுக்கு வீட்டில் இருந்த சொந்தத் தங்கை நினைவிற்கு வர, "வேண்டாம், சகோதரா, புத்தர்" ...

"டேய்" அதட்டப்பட்டான்.

பிரேக், நைலான் டயர்களைத் தேய்த்தது. தார்ச் சாலையில் சூடு பறந்தது. ஆவி பிறந்தது. 26 மிலிடரி ஷூக்கள் சாலையில் அசுரக் கால்களை ஊன்றின.

தமிழ்ச் செல்வி கூர்ந்து கவனித்தாள். பெண்கள் மிகுந்த ஜாக்ரதை உணர்வை உடையவர்கள். ஆகவே "ஸ்டெல்லா ஓடுங்கடி" என்று வெடித்தாள்.

பதிமூன்று பேரும் கருட வியூகம் அமைத்து, சாலையை அடைகாத்தார்கள். குணசிங்க ஸ்லோ மோஷனில் ஓடினான். கல்லூரியைக் குறி வைத்த புஷ்பாவைப் பற்றினான்.

கல்லூரிக்குள், பாதுகாப்புடன் நுழைந்து விட்ட தாரிணி கண்ணகியின் தீனக் குரலுக்குச் செவி சாய்த்தாள். திரும்பி செங்கல்லை எடுத்து எறிந்தாள். அது கச்சாமுச்சா என்று இலக்குக்கு எதிர் மறையில் செயல்பட்டுத் தொலைத்தது. இப்போது 13 பேரும், காம்பவுண்டில், காரிடரில், ஃபோயரில், துச்சாதனர்களாகி... தமிழ்ச்செல்வி மட்டும் எலக்ட்ரானிக்ஸ் நேரத்திற்குள், புடவையை உருவி, மரக்கிளையில் விசிறி, கழுத்தில் சுருக்கிட்டு, சட்டென்று நாக்கு வெளித் தள்ளி, பார்வை பிதுங்கிற்று.

பறவைகள், மரங்களில் சிறகடித்துப் பறந்தன. பயந்தன. பதுங்கின. சாலையில், ட்ரக் சிந்துவார் இல்லாமல் கிடந்தது.

சிவப்பு சூரியன் இறங்கி வர கையாலாகாமல் மேன் மேலும் சிவந்துபட்டான். எட்டு, நம் தாய்ப் பெறாத தங்கச் சகோதரிகள்.

ட்ரக் சாலையை விட்டுத் திரும்பிற்று. முன்பிருந்த வேகம் இப்போது குறைவு. எல்லோருக்கும் பதைப்பு இருந்தது.

"சீக்கிரம் போ." குணசிங்க.

"நேரே வெள்ளவத்தை விடு. புரோக்ராம்படி 3 மணிக்குத் திரும்புவோம்."

"ஜாக்ரதை. இந்தப் பிரதேசத்தில் அவர்கள் இருக்கிறார்கள். சீக்கிரம்."

"நல்ல வேளை. யாரும் பார்க்கவில்லை.."

என்று நினைத்துக் கொண்டு இருக்கிறார்கள்.

* * * * * * *

செல்லக்கிளி கால்பிடரிபட ஓடினான். சூரிய வெளிச்சம் காணாத காடுகள். தேவ



தாரு மரங்கள். கை கால்கள் சிராய்ப்பு. முன் தறிப்பு. லட்சியமே இன்றி, கண்ணீரைத் துடைத்து விட்டுக் கடுகி ஓடினான்.

''செல்லக்கிளி வெள்ளவெத்தை போனான். வந்துவிடுவான்'' என்று சொல்லி விட்டு இஸ்ரேலில் இருந்து வந்த மெஷின் கன்னுக்கு ப்ராஸோ ஏற்றினான் இமயவரம்பன்.

''வரட்டும்'' என்றவருக்கு 38 இருக்கும். வெகு அண்மையில் குளிர் பிரதேசத்தில் இருந்து திரும்பி இருக்கிறார். கன்னங்கள் ரூஜில். மூக்கு பளபள. கண்களில் அறிவொளி வீசிற்று.

வாக்கி டாக்கி கமறிற்று. அதை அடக்கி வாசித்து விட்டுத் திரும்பினார் இமயவரம்பன்.

''என்ன செய்தி இமயா?''

''பிரமாதம் இல்லை. அனுராதபுரத்தில் இருந்து இங்கே, டார்பிடோ ஸ்கூலுக்கு 13 பேருடன் ஒரு ட்ரக் வந்திருக்கிறதாம். எதற்கு என்று தெரியவில்லையாம். மறுபடி செய்திக்குக் காத்திருங்கள்'' என்றார் தோழர் ஜோதி பாஸ்கரன்.

''செல்லக்கிளி வந்தால் தெரிந்து விடும்'' என்றார் வஸந்தன். ''எதற்கு இந்த அத்துவானத்தில் காலேஜ் கட்டி இருக்கிறார்களோ?'' என்றார் 'மேப்' பார்த்தவாறே.

''ஸோ. பொன்னம்பலம் என்ன சொன்னார்?''

''கவலையே வேண்டாம். எந்த 24 மணி நேரத்துக்குள்ளும், ஒரு லட்சம் டாலர்—ஐ நியூயார்க்—ல் இருந்து மதராஸ—க்கு மாற்ற ஏற்பாடு ஆகிவிட்டதாம்.''

''நல்லது. எனில் மதராஸில் நமக்குக் கவலை இல்லை அல்லவா?''

''ஆம். பணக் கவலை இல்லை.'' என்றார் மணி.

''பாதுகாப்பு?''

''தலைவர்கள் இருப்பார்களே, இல்

''இருப்பார்கள். கோஷம் போட்டு, பேரணி நடத்தி, போஸ்டர் போட்டு, கடற்கரை மணலில் கூட்டம் போட்டு அப்புறம்...''

''அப்புறம்?''

''வீட்டிற்குப் போய் தயிர் சாதம் சாப்பிட்டுத் தூங்கிவிடுவார்கள்.''

''அப்படியா?'' என்றார் வஸந்தன்.

''சொந்தச் சகோதரர்கள் துன்பத்தில் சாதல் கண்டும்
சிந்தை இரங்காரடி கிளியே
செம்மை மறந்தாரடி'' —

என்று பாரதி பாடினார் மணி.

''நமக்கு நாம்தான்.''

''சரி. இந்த தினத்து பொஸிஸன் சொல்லுங்கள்'' என்று நெட்டி முறித்து, கால் நீட்டினார் மணி.

''இந்த ஏரியாவில் மட்டும் 1200 தோழர்கள். அதில் டாக்டர்கள் 20, எஞ்சினியர்



கள் 35, வக்கீல்கள் 60, தொழிலதிபர்கள் 19, அப்புறம்...''

"ஹாவார்ட் யுனிவர்சிடியில் போதித்துக் கொண்டு இருந்தாரே நண்பர் தியாகராஜா, அவரும் விட்டுவிட்டு வந்து விட்டாராமே! பொன்னம்பலம் சொன்னாரே.''

''அவர் மட்டுமல்ல. அவருடைய தம்பி கேம்பிரிட்ஜில்,ஏரோனாடிகல்இஞ்சினியரிங் கில்டாக்டரேட்வாங்க இன்னும் 1/2செமிஸ்டர் இருந்தது. அவரும் வந்துவிட்டார். இருவருமே அடுத்த செக்ஷனில் இருக்கிறார்கள்.''

''சரி. ஆயுதங்கள்?''

''வாங்கி விட்டோம்.''

''ஷ்ரூட்கள் — ஒரு நிமிஷத்துக்கு 800 புல்லட்களை ஒரே சமயத்தில் பிரயோகிக்கலாம். அதுதான் இப்போதைய நம்முடைய சமீபத்து purchase. இரண்டாயிரம் செட் வாங்கி இருக்கிறோம். அவ்வளவும் இந்த வாரம் ஸப்மரீனில் வந்து சேருகிறது.

''இதில் நமக்குப் பயிற்சி அளிக்க ஜெனரல் ஆல்பர்ரோமியானியை நியமித்து இருக்கிறார்கள்.''

''என்னது.. மியானியையா?'' இமயவரம்பன் ஏறக் குறைய எழுந்தே விட்டார்.

''யஸ். மோஷே டயானின் ஜூனியர்.''

''பாலஸ்தீனத்தில், கமாண்டோவில், 1944 ல் இருந்தவர்?''

''எண்டப்பி ஏர்போர்ட் அதிரடித் தாக்குதலுக்கு வியூகம் வரைந்த அவரா?''

''எனில் வென்றோம்.''

''கிட்டத்தட்ட.''

''ஸப்மரீன் என்றைக்கு வருகிறது?''

''இன்றிரவு செய்தி வரும்.''

''நல்லது. கொஞ்சமாவது சுதாரித்துக் கொண்டோமே!''

''எப்போது தயாராக இருக்க வேண்டும்?''

''இப்போதே'' என்ற குரல் வெடித்தது.

முகங்கள் வெளி வாசலுக்குத் திரும்பின.

செல்லக்கிளி — அங்கொரு காட்டிலோர் பொந்திடை வைத்த அக்கினிக் குஞ்சு போல் தகதகத்து நின்றான்.

மணி எழுந்து, வஸந்தன் வாரிச்சுருட்டி, இமயவரம்பன் ஓடிவரவும்,களைத்தசெல்லக்கிளி மெஷின் கன் மேல் சரிந்தான்.

''செல்லக்கிளி என்னடா ஆயிற்று?''

இடைப்பட்ட நேரத்தில் வாக்கி டாக்கி கமறிற்று. டிரான்ஸ்மீட்டர் கண்ட்ரோல் பானலில் இருந்து விடுபட்டது.

''எட்டு நம் சகோதரிகளை சேதம் செய்து விட்டார்களே, அய்யோ!'' என்றான் செல்லக்கிளி.

''அதில் 3பேர் உடனே தற்கொலை செய்து கொண்டார்கள்'' என்றது வாக்கி டாக்கி.

''பலாத்காரத் திணறலில் இரண்டு பெண்கள் இறந்து விட்டனர்'' என்றது ட்ரான்ஸ்மீட்டர்.

''ஆஹா'' என்றெழுந்தார்கள் அத்தனை பேரும்.

இப்போது மேப் அருகே நெருப்பு மணி தர்போல் மணி, வஸந்தன், இமயன் ஏனையோர்.

''ஆல்ரைட்,இதுதான் டார்பிடோ ஸ்கூல். ஒன்றரை கி.மீட்டரில் நதி முகமாக வந்தால் ஷிப்யார்ட். அங்கிருந்து, டைபீரியஸ் மரக் கூட்டம். இஸிட் நாட்?''

''யஸ்.

''அங்கே ரோடு திருப்பத்தில் ஒரு வேகத் தடை இருக்கிறது அல்லவோ?''

''ஆம்.''

''அங்கே காத்து இருப்போம். 13 பேரும் ட்ரக்கில்அந்த இடத்தைக் கடக்காமல் டார்பிடோ ஸ்கூலுக்குப் போக முடியாது.''

''ஆமாம்.''

''அந்த இடத்தில் மறுபடியும் வேகத்தைக் குறைத்து, இரண்டாவது கியரில் ட்ரக்கை தாமதித்தே ஆக வேண்டும். அங்கே அவர்களை அழிப்போம்.''

''எப்படி?''

''சொல்கிறேன். முதலில் அந்த மேடான பகுதிக்கு அருகே ஒரு போர்டு வைப்போம்.''

• • •

**Dead slow. Road under Repair: Central PWD**

என்ற போர்டில் ரயில்வே 'ரெட்'டில் எழுத்துக்கள் பிசாசு போல் அச்சுறுத்தின. அதைத் தவிர்த்தால் பசேல் என்ற இஸ்லாம் பச்சையில் வயல்கள். அதனூடே போனால் போகிறதென்று ஒரு ரிப்பன் பாதை. பாதை முடிகிற இடத்தில் உடனே உடனே சளைக்காமல் ரப்பர் மரங்கள். அடர்வளம். அங்கே மறைந்து இருந்தார்கள். மறைத்து இருந்தார்கள் 'மெஷின் கன்'களை.

தூரத்தில் இலேசாக புழுதி எழும்புவது தெரிந்தது. இமயவரம்பன எழுந்து தூசி தட்டிக் கொண்டு சரசரவென்று மரத்தில் ஏறினார். ''வருகிறார்கள்.''

குட்டித் தரைப்படை சட்டென்று உயிர் கொண்டது.

''அவர்கள் வருகிறார்கள். அவர்கள் வருகிறார்கள்.''

ஷ்ரூட்கள், காலசர்ப்பம் போல் அயர்ந்தது. குறி எங்கே, எங்கே, எங்கே என்று தவித்தது. தகித்தது.

''இந்த ஏரியாவிற்கு வந்து விட்டோம். இனி பயமில்லை'' என்ற குணசிங் பயத்தில் இருந்து விடுபட்டான்.

அந்த நிம்மதி நீடிக்கவில்லை

டைமரை செட் செய்து விட்டு மணி செல்லக்கிளியை ''ஓடு'' என்றார்

அதாவது ட்ரக் கியர் மாற்றாமல் — சட்டென்று மேடேறிவிட்டால் யாராவது ஓடிப் போய் ட்ரக் முன்னால் நின்று குறைந்த பட்சம் ஒரு நிமிஷமாவது அவர்களைத் தாமதிக்கச் செய்ய வேண்டும் என்று ஒரு ஏற்பாடு.

அதற்குத் தகுந்தாற் போல் டைம்பாம் செட் செய்து தயார் நிலையில் இருந்தது.

ட்ரக், அனுவசியத்துக்கு Hump — ல் ஏறி விட்டது.

சார், தூக்க மாத்திரை 100 பட்டி கொடுங்க!

அதற்குப் பதிலா ஒரே ஒரு பேக் டார்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள் வாங்கினா என்ன?

*கொசுக் கூட்டத்தை ஓட்டிட நிச்சயமான வழி—*

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்





தயாரிப்பாளர்:
**பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்**
ஃபோர்ட், பம்பாய்-400 023. ஃபோன்: 273831

everest/85/BCL/5-tm

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: ஷாந்திலால் பிரதர்ஸ்,
7, காசிச் செட்டி சந்து, இரண்டாவது மாடி, சென்னை—600 001. போன்: 32886.

மணி — செல்லக்கிளியை "ஓடு" என்றார் தாட்சண்யம் இல்லாமல். "இதோ" என்ற 18 வயது செல்லக்கிளி ஓடினான். பிடரிபட ஓடினான்.

குணசிங்க பார்த்து விட்டான்.

டைபீரியஸ் மரக் கூட்டத்தில் இருந்து ஸ்லோ மோஷனில் ஒருவன் ஓடி வருகிறானே. யாரது. கையில் ஆயுதம் கூட இல்லை. ஒரு வேளை மாடு மேய்க்கிறவனோ?

"அல்ல. இது ஏதோ ஒரு விபரீதம் தான்!"

குணசிங்க தாமதிக்கவில்லை.

கான்வாயை வழித்து எறிந்தான். பள பள என்று பிரகாசித்தது துப்பாக்கிச் சனியன். யுனைடெட் ஸ்டேட்ஸ் ரைஃபிள். .30 மாடல். இந்த வருஷத்து இறக்குமதி. சீரியல் நம்பர் 1748834632. கபில நிறம். ப்ரைவேட் சேர்னிக். ஒரு கிளிப்பில் ஐந்து ரவுண்டுகள் கட்டுப் பொசுக்கலசம். பயோனட் இல்லாமல் அதன் எடை 9 பவுண்டு. Effective range அறுநூறு கஜம்.

ஆனால் செல்லக்கிளி இப்போது இருபது கஜத்தில் இருந்தான். 'டுஷூப்' என்றது ஒரு குண்டு. அதில் தப்பித்தான். பறவைகள் படபடத்தன.

வெகு அண்மையில் நெருங்கின செல்லக்கிளி, வழி வேறு தெரியாமல் சட்டென்று பூமியில் உருண்டான்.

புரண்டவாறே புற்களின் மறைவில் ட்ரக்கை நெருங்கி, தன்னை சக்கரத்துக்குள் செருகிக் கொண்டான்.

டிரைவர் பற்களைக் கடித்துக் கொண்டு பிரேக் போட்டான்.

குணசிங்க, விரயம் செய்த குண்டுகள், பச்சைப் புற்களை சிராய்த்தன. அங்கே செல்லக்கிளியின் உயிர் பிரிதலை, லாங்ஷாட்டில் பார்த்துக் கொண்டு இருந்த வஸந்தன், "மணி ப்ளீஸ்" என்று குரல் கொடுக்கார்.

மணி சட்டென்று ஸ்விட்சை ஆன் செய்தார்.

வெடித்தது.

பிரதேசம் ஒரு சின்ன பூமி அதிர்ச்சியை ஏற்படுத்திற்று. ட்ரக் சிதறி, பெட்ரோல் டாங்க் உடைபட்டது. அக்கினி உக்ரமாக எழுந்தது. 13 பேரும், எடுத்து வைத்த அடியெல்லாம் கொப்பளிக்க, அப்படியே, அப்படியே வீழ்ந்துவிட்டார்கள்

"க்விக். பாக் அப்" என்றார் இமயவரம்பன்.

"ஒருநிமிஷம்" என்ற மணி தலை தெறிக்க ஓடினார்.

ட்ரக் அருகே வருவதற்கு 30 செகண்டுகள் ஆயிற்று.

சட்டென்று குனிந்து நெருப்பினூடே நுழைந்தார். கால் சுட்டது. காலர் எரிந்தது. கேசம் பொசுங்கிற்று. டயருக்கு அடியில் எப்போதோ இறந்துவிட்ட செல்லக்கிளியின் உடலை இழுக்க, மேல் பாதி மட்டும் வந்தது. உடல் திறந்து கிடந்தது. செல்லக்கிளியின் உடல் ஏற்கனவே ட்ரக் சக்கரத்தில் சேதமுற்று இருந்தது. இப்போது நெருப்பு வேறு தர்ட் டிகிரியில் குலைத்து இருந்தது. மணி, முகம் தெரியாத செல்லக்கிளியைத் தடவிக் கொடுத்தார்.

"எழுந்திருங்க மணி. சைரன் ஊதிவிட்டார்கள். ப்ளீஸ்". மணி எழுந்தார். ஒரு நிமிஷம் நின்றார். "இது களப்பலி இமயா" என்றார்.

"எஸ்" என்றார் இமயவரம்பன்.

மரக்கூட்டத்து மத்தியில் பொதிந்து இருந்த லாரியில் இமயவரம்பனும், மணியும் தாவினார்கள்.

டார்பிடோ ஸ்கூலில் இருந்து கணகண வென மணி அடித்துக் கொண்டே சரம் சரமாக மிலிடரி ட்ரக்குகள் வெளிப்பட்டன.

"ம். சீக்கிரம்" என்று வஸந்தன் பதறினதும், லாரி பறந்தது.

மணி தூரத்தில் தெரிந்த நெருப்பைப் பார்த்தார். "இது சாதாரண நெருப்பு அல்ல" என்றார்.

"ஆமாம்" என்றார்கள், லாரியில் இருந்தவர்கள்.

ஆம். உண்மைதான். இதிகாசத்துக்கு அப்புறம் வெகு காலம் கழித்து வைக்கப்பட்ட இரண்டாவது நெருப்பு.

இலக்கியவாதிக்கு மரியாதை

லக்னோ — கான்பூர் இடையில் உள்ள உன்னுப் ஜங்ஷனில் ஒரு வித்தியாசமான அறிவிப்புப் பலகை:

"இங்கிருந்து சற்றுத்தூரத்தில் உள்ள இடத்தில்தான் பிரபல ஹிந்தி நாவலாசிரியர் பகவதி சரண் வர்மா பிறந்தார்."

இவ்வாறு குறிப்பிட்டதுடன் அவர் பிறந்த, மறைந்த தேதிகளும் பொறித்திருக்கிறது!

— கண்டு வியந்தவர்: சுப்ர பாலன்.



# கூடுதல் வட்டி

# +2%

வழக்கமான
விகிதத்துடன்
வழங்கப்படுகிறது

கீழ்க்கண்ட
வட்டி விகிதங்களில்
டெபாசிட்டுகள் ஏற்றுக்
கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் |
| --- |
| 17+2 |
| **19%** |

| 2-வருடங்கள் |
| --- |
| 18+2 |
| **20%** |

| 3-வருடங்கள் |
| --- |
| 19+2 |
| **21%** |

| 5-வருடங்கள் |
| --- |
| 22+2 |
| **24%** |

**மேற்படி கூடுதல் வட்டி**
**பென்ஷனர், மகளிர், மைனர்களுக்கு மட்டும்**
**"V.I.P. BRIEF CASE"**
**அன்பளிப்புடன் வழங்கப்படும்.**

உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

| | |
| --- | --- |
| சென்னை | : 91, உஸ்மான் ரோடு<br>(சிவா-விஷ்ணு கோயில் அருகில்)<br>தி.நகர், சென்னை-600 017<br>போன் : 447186/442218 445480 |
| பெங்களூர் | : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)<br>மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003<br>போன் : 366971 |
| திருச்சி | : 22 மதுரை ரோடு (முதல் மாடி)<br>ராஜா தியேட்டர் அருகில்,<br>திருச்சிராப்பள்ளி-620 008 போன் : 29772 |
| பாண்டிச்சேரி | : 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்)<br>பாண்டிச்சேரி-605 001. போன் : 6493 |
| தஞ்சாவூர் | : எண் : 2 & 3 முதல் மாடி ஜி. ஏ. கனால் ரோடு,<br>தஞ்சாவூர்-613 001. போன் : 1626 |
| திருவண்ணாமலை | : 14 A, ஆனைக்கட்டி தெரு,<br>திருவண்ணாமலை-606 601. போன் : 2483 |
| பட்டுக்கோட்டை | : 9-A, தலையாரி தெரு,<br>பட்டுக்கோட்டை-614 601 போன் : 453 |

JAY ADTS.8,103

# மௌனப் புயல்

வாஸந்தி

**1**

''ஹம் மஜ்பூர் ஹைஹன்.''

"நாம் நிர்ப்பந்தத்தில் இருக்கிறோம். தேசத்துக்கு விரோதமான அழிப்பு சக்திகளை நாம் அடக்கியே ஆக வேண்டும்...''

வார்த்தைகளின் உச்சரிப்பில் ஒரு தடுமாற்றம் தெரிந்தது. குரலில் ஒரு சோகமோ, கையாலாகாத்தனமோ இழையோடிற்று. நான் தோற்றுப் போனேன் என்று ஒப்புக் கொள்ளப் பயந்த மாதிரி—

ஹம் மஜ்பூர் ஹைஹன்....

'ஒரு முக்கிய அறிவிப்பு' என்கிற ஒரு எதிர்பாராத தாக்குதலுடன் 14''×18'' விஸ்தீரணத்தில் தோன்றிய முதிய களைத்துப் போன முகமும், பிறகு ஒலித்த வார்த்தைகளும் தெளிவில்லாத வார்த்தைகளில் தொனித்த ஹேஷ்யமும்

இரவு முழுவதும் தூங்கவிடாமல் இது கனவா, நனவா என்று புரியாதபடி அந்தப் பார்வையின் அயர்வும் குரலின் சோகமும் ஐம்புலன்களைத் தாக்கி, மூளையை ஆக்கிரமித்து இப்பொழுது நாடி நரம்புகளையெல்லாம் ஊடுருவி...

''ரஞ்சனி, எழுந்திருக்கல்லே?''

ரஞ்சனி சரேலென்று விழித்துக் கொண்டாள். ஜன்னல் வழியே ஜூன் மாதத்து வெய்யில் எட்டிப் பார்த்திருந்தது.

அவள் அவசரமாக எழுந்தாள் நேற்றைய நினைப்பில்.

''பேப்பர் வந்தாச்சாம்மா?''

''வந்து, அப்பா அதைப் படிச்சு, தலை போகிற அவசரத்தோட ஜெய்ன் வீட்டுக்குப் போயிருக்கார் பேச.''

வழக்கத்துக்கு விரோதமான வேகத்துடன் பல் துலக்கி, அம்மா கையில் திணித்த காப்பியைக் கவனமில்லாமல் பருகியபடி, அவள் செய்தித்தாளைப் பிரித்தாள்.

கொட்டை கொட்டையான தலைப்புச் செய்தியில் நேற்றைய திடீர் முக்கிய அறிவிப்புக்கான விளக்கம் இருந்தது. செய்தியின் விபரீதம் பிரக்ஞையில் உறைப்பதற்குமுன் மனத்துக்குள் காரணம் புரியாமல் திக்கென்றது.

சட்டென்று மன்மோஹன் ஸிங்கின் நினைவு வந்தது. அவனை உடனடியாய்ப் பார்க்க வேண்டும் போல் இருந்தது. அவள் விரைவாகச் செய்தித்தாளை ஒரு நோட்டம் விட்டுவிட்டு டெலிபோனுக்குச் சென்றாள். மன்மோஹன் வீட்டு எண் வெகுநேரப் பிரயத்தனத்துக்குப் பின் கிடைத்தது. அவன் வீட்டில் இல்லை என்கிற செய்தியுடன். செய்தி தந்த குரலில் சோர்வு ஒலித்தது.

அவள் ஏமாற்றத்துடன் எழுந்தாள். ரமேஷ் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தான். அவள் அவன் அறைக்குள் எட்டிப் பார்த்து,

''ஏய், இன்னும் எழுந்திருக்கல்லே? எத்தனை பெரிய நியூஸ் இன்னிக்கு வந்திருக்கு!'' என்று குரல் கொடுத்ததும் விசையை முடுக்கினாற்போல் ரமேஷ் எழுந்திருந்தான்.

அப்பா இன்னும் ஜெயின் வீட்டிலிருந்து திரும்பியிருக்கவில்லை. அவரது அரசியல் கொள்கைகளுக்கு அவரது அலுவலக நண்பர்கள்தான் புகலிடம். ஒரே அச்சில் வார்த்திருப்பவர்கள் என்கிற காரணத்தால், அந்தக் கும்பலில் தான் அப்பா தனக்குப் பாதுகாப்பு இருப்பதாக நம்புகிறார் என்கிற மெல்லிய பரிதாபத்துடன் அவள் குளிக்கச் சென்றாள்.

''ரஞ்சனி! இன்னிக்கு ஸ்பானிஷ் க்ளாஸுக்குப் போகப் போறியா?'' என்று அம்மாவின் குரல் சமையலறையிலிருந்து கேட்டது.

''ஆமாம்.''

''ருமாவோடத்தானே?''

''ஆமாம்!''

இந்த மாதிரி அனாவசியமான கேள்விகள் கேட்காமல் அம்மாவால் இருக்க முடியாது என்ற மெல்லிய நமைச்சலுடன் அவள் ஷவரைத் திருப்பினாள். ருமாவைப் பற்றிய ஞாபகப்படுத்தலில் செய்தித்தாளின் கொட்டை எழுத்துக்கள் மறுபடி யோசனையைக் கிளப்பின. ருமாவின் வீட்டை இந்தச் செய்தி எப்படித் தாக்கியிருக்கும்? மன்மோஹன் வீட்டவர்களாவது சற்று முற்போக்குச் சிந்தனையாளர்கள். ருமாவின் வீட்டில் ஒவ்வொரு அறையிலும் சீக்கிய குரு ஒருத்தரின் படம் இருக்கும். அவள்

# கரத்தை, நாணயத்தை நாடுவோரின் நம்பிக்கை நிலையம் - புகழ்மிக்க பாபாலால்

## அசல் தங்க நகைகள், அழகழகான வெள்ளி சாமான்கள், பரிசுப் பொருள்கள்

நவரத்தினங்களுக்கு நிகரில்லாப் பெயர் ஈட்டியது பாபாலால் என்பது எல்லாரும் ஏற்கும் உண்மை. அதேபோல் அசல் தங்க [illegible]ணங்கள், நிகரில்லா வெள்ளி வகைகள், நாடு போற்[illegible] கலை[illegible]ப்பு மிக்க பரிசுப் பொருள்களுக்கும் நம்பிக்கை நிலைய[illegible]பாலால். கலைவினைச் சிறப்பே உயிர் மூச்சாய், நாணயமே [illegible] சித்தாந்தமாக நம்பி பணி புரிவது பாபாலால் என்பதே [illegible] காரணம். கடந்த 70 ஆண்டுகளாக நிலைத்து, வள[illegible] வாடிக்[illegible]ளர் பட்டியலே பா[illegible]லால் [illegible] நம்பிக்கைக்கும் பாத்திரமாக வல்லது [illegible]பது சான்று.



வீட்டிற்கு எப்பொழுது சென்றாலும் யாராவது பூஜை அறையில் குருகிரந்த ஸாஹப் படித்துக்கொண்டிருப்பார்கள். இந்தவார்ப்பிலேயே வளர்ந்த ருமா தனது காதலனைக் கூடத் தனது இனத்திலிருந்தே கவனமாகப் பொறுக்கியிருக்கிறாள் என்று நினைக்கும் போதெல்லாம் ரஞ்சனிக்கு விநோதமாக இருக்கும்.

இவர்களுக்கெல்லாம் இன்றைய செய்தி ஏற்படுத்தும் பாதிப்பைப் பற்றி ஒரு கட்டுரை எழுதினால் என்ன? என்று திடீரென்று தோன்றிற்று.

எண்ணம் எழுந்ததுமே இன்றே அதைச் செயலாக்க வேண்டும் என்று மனசு பரபரத்தது.

அவள் ஷவரை நிறுத்தியதும் வெளியில் பலத்த குரல்கள் கேட்டன.

''எல்லாம் தெரிஞ்ச மேதைன்னு பேசாதேடா! உன்னைவிட வயசிலே பெரியவன்கள் எல்லாம் முட்டாள்னு நினைப்பா உனக்கு?''

''வயசுக்கும் பார்வைக்கும் சம்பந்தமில்லே! கவர்ன்மெண்ட் ஸர்வெண்ட் என்கிறதனாலே அரசாங்கம் பண்றதெல்லாம் சரின்னு மண்டையாட்டற ஆட்டு மந்தையைச் சேர்ந்தவர் நீங்க!''

ரஞ்சனி அவசரமாக ஷவரை மீண்டும் திருப்பி அதன் ஓசையில் நின்றாள்.

அப்பா ஜெயின் வீட்டிலிருந்து திரும்பியிருப்பார். ரமேஷிடமிருந்து நேர் எதிர்மறையான வாதங்கள் தான் வரும் என்று தெரிந்தும் அப்பா அவன் வாயைக் கிண்டியிருப்பார்.

இது அவருடைய விசித்திர சுபாவம் என்று ரஞ்சனிக்கு மெல்லிய எரிச்சல் ஏற்பட்டது. குழந்தைகள் மனத்தளவில் சுதந்திரமாக வளர்ந்துவிட்டதை ஏற்கத்துணிவில்லாதவர். தன் அரசியல் கொள்கைக்கு எதிரான கொள்கைகளைத் தன் எதிரில் அவர்கள் பேசுவதையே தனக்கு அவமதிப்பாக நினைப்பவர். அவருடைய இந்த பிரமையைப் போற்றிக் காக்க—யுவர்ஸ் ஃபெய்த்ஃபுல்லி என்று ஒத்துப்போகும் அம்மா...

அவள் வெளியில் வந்தபோது வீடு சர்வ நிசப்தத்தில் இருந்தது. அப்பாவும், அம்மாவும், ரமேஷும் ஆளுக்கொரு மூலையில் பதுங்கியிருந்தார்கள். தினம் தினம் நடக்கும் விஷயமானாலும் எதிர்பாராமல் கிடைத்த அதிர்ச்சிபோல் ஆபீஸ்போகிறவரை அப்பா கலங்கி நிற்பார். குடும்ப விஷயம் ஏதோ சந்தியில் நின்றுவிட்ட பதைப்புடன் சமையலறை அலமாரியில் அடக்கமாகப் புன்னகைக்கும் அபய ஹஸ்தங்களிடம் அம்மா சரணடைவாள்...

குளிக்கக் கிளம்பிக் கொண்டிருந்த ரமேஷிடம் அவள் ஈரத்தலையைக் கோதியபடியே மெல்ல,

''நீயேன் அப்பாகிட்டப் பேசப் போறே?'' என்றாள்.

''வொய் நாட்?'' என்றான் அவன் தீவிரமாக. ''நா என்ன இன்னும் குழந்தையா? இவர் ஜால்ரா போடறமாதிரி நீயும் நானும் போடணுங்கறார். இந்த ஜால்ராக்கள் இருக்கிற தைர்யத்திலேதான் என்ன வேணாச் செய்யலாம்னு கவர்ன்மெண்ட் நடக்கிறது. காட் ஸேவ் திஸ் கண்ட்ரி!''

''காட் ஸேவ் திஸ் ஹவுஸ்!'' அப்பா கூடத்திலிருந்து இரைவதைக் கேட்டு இருவரும் புன்னகைத்துக் கொண்டார்கள்.

ரமேஷ் உதட்டைப் பிதுக்கித் தோளைக் குலுக்கிக் குளிலறைக்குள் நுழைந்தான். டெலிபோன் ஒலித்தது. மன்மோஹன் ஸிங்காக இருக்கும் என்கிற ஆர்வத்துடன் அவள் விரைந்து எடுத்தாள்.

அவள் வழக்கமாக எழுதும் பத்திரிகையின் உதவி ஆசிரியர் ராதாகிருஷ்ணனின் குரல் கேட்டது.

''ரஞ்சனி ஒரு பேட்டி பண்ணணும் நீ!'' என்றான் நேரடியாக.

''யாரை?''

''பஞ்சாபி எழுத்தாளர் கர்தார்ஸிங்கை. இன்றைய செய்தியைப் பத்தின அவரது பாதிப்பு, கருத்து இதையெல்லாம் கேட்டுத் தெரிஞ்சிண்டு வா. உனக்குத்தான் விஷயத்துடைய பாக்ரௌண்ட் தெரியுமே!''

''எங்கே பேட்டி? எத்தனை மணிக்கு?''

''சாயந்திரம் ஏழரை மணி. அவர் வீட்டில். போட்டோகிராஃபர் ஷ்யாம்கிஷோர் உன்னை அழைத்துக்கொண்டு போவான்.''

''சாயங்காலம் ஏன்? பகல் அவருக்குச் சௌகரியப்படாதா?''

''நமக்குச் சௌகர்யப் படாது!'' ராதாகிருஷ்ணன் சிரிப்பது கேட்டது.

''சாயந்திரம்தான் ஆள் ரிலாக்ஸ்டாயிருப்பார். ஏழரை மணிக்குள்ளே ஒரு பெக் உள்ளே போயிருக்கும். மனசைத் திறந்து பேசுவார். நமக்கு சுவாரஸ்யமான கட்டுரை கிடைக்கும்!''

ரஞ்சனி, ''ஓ. கே!'' என்று சிரித்தபடி ஃபோனை வைத்தாள்.

தன்னுள் மூழ்கிய யோசனையுடன் சமையலறைக்குச் சென்று அங்கிருந்த மேஜையில் அமர்ந்து அவள் சாப்பிடுவதைக் காணச் சகிக்காமல் அம்மா அவளுக்கு மட்டும் காது கேட்கும்படியாக முணுமுணுத்தாள்:

''அப்பாவும், பிள்ளையும் வாக்குவாதம் பண்ண ஆரம்பிச்சுட்டான்னா கையும்காலும் வெல வெலத்துப் போறது எனக்கு.''

ஓரிரு வினாடி அம்மா என்ன சொல்கிறாள் என்று புரியாமல் ரஞ்சனி விழித்துப் புன்னகைத்தாள்.

''அவ்வையார் வசனம்னு சொல்லியேம்மா, பிள்ளை தோளுக்கு மிஞ்சினாத் தோழன்னு! நானும் ரமேஷும் உங்க ரெண்டுபேர்தோளுக்குமேலவளர்ந்து எட்டு வருஷமாறது!''

''அதுக்காக மரியாதையில்லாமே...''

''மரியாதையில்லேங்கிறதெல்லாம் உன் கற்பனை. யோசிக்கத் தெரியாதவாதான் இந்த தேசத்திலே ஜாஸ்தி. எங்களுக்கு

யோசிக்கத் தெரியறதேன்னு நீ சந்தோஷப் படணும்!''

அவள் அவசரமாகக் கையைக் கழுவிக் கொண்டு வந்து மீண்டும் சமையலறையில் எட்டிப் பார்த்து மெல்லிய இணக்கமான குரலில் சொன்னாள்.

''அவ்வையார் சொன்னதை நிதானமா யோசிச்சுப் பாரு. புதுசா அர்த்தங்கள் புரியும்!''

அடுத்த நிமிஷம் அங்கு நில்லாமல் அவன் புத்தகத்தை எடுத்துக் கொண்டு பொதுவான ''போயிட்டு வரேன்!''னுடன் வெளியில் சென்றான்.

தெரு வழக்கம்போல் இருந்தது. பிரதமரின் நேற்றைய பூடகமாக அறிக்கையும் இன்று பேப்பரில் வெளிவந்துவிட்ட விஷயமும் இந்தத் தெருவைச் சலனப்படுத்தியதாகத் தெரியவில்லை. சலனமேற்பட்டிருந்தாலும் இந்த அரசாங்கக் காலனி அதைப் பகிரங்கப்படுத்தாது. இயல்பான அங்கமாகிப் போன இந்த மரபை மீறத் துணியாது. அப்பாவைப் பற்றிய ரமேஷின் வர்ணனை சற்றுக் குரூரமாக இருந்தாலும் உண்மைக்குப் புறம்பானதில்லை என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

''ஹம் மஜ்பூர் ஹைன்!''

இந்த நிர்ப்பந்தம் எப்படி ஏற்பட்டது? இதன் சரித்திரக் காரணங்களைத்தான் அப்பாவிடம் ரமேஷ் பிட்டுப் பிட்டு வைத்திருப்பான். தன்னால் வாய்விட்டுச் சொல்ல முடியாததைத் தன் வாரிசு தன் கூரையின் கீழ் சொல்வதைக் கண்ட கலவரம் அப்பாவுக்கு... அவன் சொல்வதில் இருக்கும் உண்மை பற்றிய அடிமனப் பிரக்ஞையின் கலக்கம்...

அப்பாவுக்கும்தெரியும்—எப்படிப்பட்ட சிக்கல்கள் உருவாக்கப்பட்டு, அமுக்கப்பட்டு, பிறகு அமுக்க முடியாமல் பண்டோராவின் பெட்டியிலிருந்து வெளிப்பட்ட வினைகளின் தாக்குதலில்தான்—

''ஹம் மஜ்பூர் ஹைன்!''

ரஞ்சனி தீவிரமாகத் தலையை அசைத்தபடி, மெத்தனமான அமைதியுடன் காட்சியளிக்கும் அந்தக் காலனியின் மௌனத்தைக் கண்டு எழுந்த காரணமற்ற கோபத்துடன் விரைந்தாள்.

''ஹாய் ரஞ்சனி!''

ரஞ்சனி திரும்பினாள். அவள் கல்லூரியில் படிக்கும் ஸோனியா தன் வீட்டுத் தோட்டத்தில் நின்றிருந்தாள், இன்னும் நைட் கௌனில்.

''ஹாய்!''

''என்ன, ஸ்பானிஷ் க்ளாஸா? ஏன் இப்படி லீவு நாள்லே கூட ரிலாக்ஸ் பண்ண மாட்டேங்கறே?''

பொம்மை மாதிரி வழவழவென்றிருந்தது முகம். உண்மையிலேயே பொம்மை — மண்டை முழுவதும் மழமழ...

''ஐ லைக் இட் யார்!'' என்று ரஞ்சனி சிரித்தாள்.

''நியூஸ் தெரியுமோ?''

''எந்த நியூஸ்?''

ரஞ்சனி புன்னகைத்தபடி விரைந்தாள்.

''ஒண்ணுமில்லே, ஃபர்கெட் இட்!''

''ஸாரி யார்! என்ன விஷயம்? எனக்குப் பாலிடிக்ஸ்லே இன்ட்ரஸ்ட் இல்லே!''

''ஃபர்கெட் இட்!''

முனை திரும்பியதும் பெரிய புல்தரையும், அதற்குக் கரை கட்டினாற்போல் பூந்தோட்டமுமாய் ருமாவின் வீடு தெரிந்தது. இந்த நேரத்தில் வழக்கமாகப் புல் தரையில் நாற்காலியில் அமர்ந்து பேப்பரைப் படித்துக்கொண்டிருக்கும் ருமாவின் தாத்தாவை இன்று காணோம். அவள் கேட்டைத் திறக்கும் ஓசை கேட்டதும் பேப்பரைக் கீழே தாழ்த்தி வெள்ளை தாடி மீசைக்கிடையில் பளீரென்று வெண் பற்கள் மின்ன,

''ஆவோ பேட்டி, க்யா ஹால்ஹை?''

(வா, மகளே, என்ன சமாச்சாரம்?'')

என்று கேட்பார்.

இன்றைக்கு நாற்காலியே புல்தரைக்கு வரவில்லை.

ரஞ்சனி அழைப்பு மணியை அழுக்குமுன் ருமா கதவைத் திறந்தாள்.

''ஹாய்!'' என்றாள் கரத்தில்லாமல்.

''உக்கார், வரேன் இரண்டு நிமிஷத்திலே.''

எப்பொழுதும் கலகலப்பாக இருக்கும் வீடு சர்வ நிசப்தமாக இருந்தது. ருமாவின் தம்பி பப்லு கூட இன்று அவளிடம் ஏதும் பேசாமல் ஏதோ புத்தகத்தில் ஆழ்ந்திருப்பதுபோல் பாவனை செய்தான். வெட்டப்படாத தலைமுடி மேலே பந்தாக ஒரு சின்னத் துணியில் முடிக்கப்பட்டிருந்தது. 'இவனுக்குக் கோடை விடுமுறை எப்பொழுது முடியும் என்றிருக்கிறது. வீட்டை இரண்டு பண்ணுகிறான்' என்று நேற்றுத்தான் ருமா அலுத்துக் கொண்டாள்.

''ஹலோ!'' என்றபடி ருமாவின் அப்பா இலீப்ஸிங் எட்டிப் பார்த்தார்.

''ருமா இன்னும் தயாராகவில்லே?'' என்றபடி கையில் செய்தித்தாளுடன் அவள் எதிரில் அமர்ந்தார்.

''இன்றைக்கு இந்த வீட்டில் எதுவுமே கிரமமாக நடக்கவில்லை. ஸ்தம்பித்துப் போய்விட்டது. செய்தி தெரியுமோ இல்லையோ?''

''தெரியும்'' என்றாள் அவள் மெள்ள. பிறகு தயங்கியபடி கேட்டாள்.

''எப்படி எடுத்துக் கொண்டீர்கள் இந்தச் செய்தியை?''

இலீப்ஸிங்கின் கண்களில் மெலிதான கோபத்தின் ரேகை பளிச்சிட்டது.

''துக்கத்துடன்தான்! பின் எப்படி இருக்கும்? எங்கப்பாவுக்கு, முக்கியமாக, தாங்கவே முடியவில்லை. பொற்கோவிலுக்கும் சீக்கியனுக்கும் இருக்கும் உறவு சீக்கியனுக்குத்தான் புரியும். அந்த உறவு ரொம்ப ஆழமானது, அந்தரங்கமானது...''

ஏதேதோ கேள்விகள் மனத்தில் எழுந்தன. அவரது முகத்தில் தெரிந்த துயரத்தைப் பார்க்கும் போது, எதிலோ ஏமாந்து அவமானப்பட்ட பாவனையை உணர்ந்த போது அந்தக் கேள்விகளைக் கேட்பது அநாகரிகம் என்று அவள் மௌனமானாள்.

அவர் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு இரண்டு கைகளையும் உயரத்தூக்கி ''வெல், என்ன செய்வது? நிலைமை சீர்கெட்டுப் போன பிறகு அரசுக்கு வேறு வழியிருக்கவில்லை'' என்று புன்னகைத்தார்.

இவரும் ஒரு அரசாங்க அதிகாரி என்று அவளுக்கு நினைவு வந்தது.

''நான் ரெடி!'' என்று ருமா வந்தாள்.

வழக்கமான உற்சாக விடைபெறுதல் ஏதும் இல்லாமல் இருவரும் கிளம்பினார்கள்.

''எங்கே உங்க தாத்தாவைக் காணோம் ருமா?'' என்றாள் ரஞ்சனி தெருவுக்கு வந்ததும்.

ருமா தெருவை நேராகப் பார்த்தபடி சொன்னாள்.

''காலையிலிருந்து பூஜை அறையில் முடங்கியிருக்கிறார். 'இவர்களை மன்னியுங்கள் வாஹே குரு' என்று பிரார்த்திக்கிறாரோ என்னவோ?''

ருமாவின் பார்வையில் ஒரு குழப்பம் தெரிந்தது.

''ஃபன்னி யார்! நேற்று வரை நான் என் இனத்தைப் பற்றியோ என் மதத்தைப் பற்றியோ தீவிரமாச் சிந்தித்ததில்லே. நான் சின்ன வயசிலே அமிருத்ஸர் ஒருதரம் போயிருக்கேன் — பொற்கோவிலைப் பார்த்திருக்கேன். விடுமுறைக்கு வேற எங்கே எல்லாமோ போவோமே தவிர ஊர்ப் பக்கம் போனதில்லே. எங்க தாத்தாவுடைய ஊர் அமிருத்ஸர் இத்தனைக்கும். இன்னிக்குக் காலையிலே எழுந்ததும் கோவிலுக்குள்ளே ராணுவம் அனுப்பப்பட்டுவிட்டதுன்னு சொன்னவுடனே என் தாத்தா இடிஞ்சு அதிர்ந்து போனதை நீ பார்த்திருக்கணும். அவருடைய துக்கத்தையும் என் அப்பாவுடைய மௌனக் கோபத்தையும் பார்க்கும் போதுதான் எனக்குப் புரிகிறது இந்த விஷயம் எங்களுக்குச் சாதாரண விஷயமில்லை என்பது.''

''எங்களுக்கு.''

முதல் முறையாகத் தொனித்த அந்த வித்தியாசத்தை ரஞ்சனி கவனித்தாள். மறுபடி மன்மோஹன் ஸிங்கின் நினைவு வந்தது. கவலையேற்பட்டது.

(தொடரும்)

''பெட்ரோல் விலை ஏறிட்டதால மாப்பிள்ளை ஸ்கூட்டர் வேணான்னுட்டார்.''

''சந்தோஷம்தானே!''

''மண்ணாங்கட்டி! லைசென்ஸ் ரத்துன்றதால ஒரு கலர் டி.வி. வாங்கி தரச் சொல்றார் இப்ப!''

— வெ. சீதாராமன்



## வளரும் குழந்தைகளுக்கு சுவையான துணையாக விளங்கும் பால் பிஸ்கட்






சத்துமிகுந்த,
சுவையான பிஸ்கட்.

பிரிட்டானியா

LINTAS BIN MB 10 2013 TM

வளரும் குழந்தைகளுக்கு சுவையான
துணையாக விளங்கும் பால் பிஸ்கட்






சத்துமிகுந்த,
சுவையான பிஸ்கட்.

பிரிட்டானியா

LINTAS BIN MB 10 2013 TM

# சிறிதே சாதுர்யம் தேவை, கேசம் பெறுகிறது இளமை!





வாழ்க்கையின் குறிப்பிட்ட ஒரு நேரத்தில் கேசம் நரைக்கத் துவங்குகிறது. இளமை அத்துடன் முடிவடைந்துவிட்டதாக நீங்களும் எண்ணி விடுகிறீர்கள். அது வெறும் பிரமைதான். சிறிதே சாதுர்யமாக செயல்பட்டால் இத்தகைய தவறான பிரமை விலகிவிடும்.

**கேள்வி:** கேசத்திற்கு ஹேர் டை எப்போது உபயோகிக்கத் துவங்கலாம்?

**பதில் :** கேசம் நரைப்பதற்கு குறிப்பிட்ட வயது என்று எதுவும் கிடையாது. அதனால், நரைக்கும் அறிகுறி தோன்றியதுமே கேசத்துக்கு ஹேர் டை உபயோகிக்கலாம்.

**கேள்வி:** ஆனால் ஹேர் டை செய்வது என்பது பெரும் தொல்லையும், மிகுந்த நேரம் தேவைப்படும் விஷயமும் அன்றோ?

**பதில் :** நீங்கள் கண்டகண்ட ஹேர் டைகளை வாங்கி உபயோகித்தால் அப்படி நேரக்கூடும். ஆனால் கோத்ரெஜ் ஹேர் டை உபயோகிப்பது மிகவும் எளிது. காரணம் இது தானாகவே பரவி விடுகிறது.

**கேள்வி:** அடிக்கடி ஹேர் டை உபயோகித்தால் கேசத்திற்குக் கெடுதல் ஏற்படக்கூடுமா?

**பதில் :** உயர்தரக ஹேர் டையாக இருந்தால் சிறிதும் கெடுதல் இல்லை. அதாவது, கோத்ரெஜ் ஹேர்டை கேசத்துக்குக் கருமை யூட்டுவது மட்டுமல்லாது, அதை அழகுறச் செய்து பளபளப்பும் அளிக்கிறது.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டையினால் துணிகள், தலையணைகள் இவற்றில் கறைகள் ஏற்படுகின்றனவா?

**பதில் :** கோத்ரெஜ் ஹேர் டையினால் அப்படி ஏற்படாது. காரணம், அது மற்ற ஹேர் டைகளைப்போல் கேசத்தின் மேற்பகுதியில் தங்கி விடாமல் கீழ்ப்பகுதிவரை ஊடுருவிச் செயல்புரிகிறது.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டை எவ்வளவு நாட்களுக்கு செயல் திறனை நீடித்து வைக்கின்றது?

**பதில் :** குறைந்த பட்சம் மூன்று-நான்கு வாரங்களுக்கு.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டையின் மூலம் கேசத்தை டை செய்தபின் வழக்கம்போல் தலையை அலசிக்கொள்ள முடியுமல்லவா?

**பதில் :** ஆம், கேசத்தை நல்ல ஷாம்பூ போட்டு அலசவும், பிறகு அதன்மீது ஹேர்-ஆயில் அல்லது க்ரீம் போட்டுக் கொள்ளலாம்.

**கேள்வி:** ஹேர் டையினால் ஒருவித துர்நாற்றம் வீசுகிறது என்கிறார்களே?

**பதில் :** வேறு ஹேர் டைகளைப் பொறுத்தவரை இவ்விதமாக இருக்கக்கூடும். ஆனால் கோத்ரெஜ் ஹேர் டையில் நல்ல நறுமணம் உண்டு. தவிர இதில் கண்டிஷனரும் உள்ளது.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டை பற்றி வேறு ஏதேனும் கூற முடியுமா?

**பதில் :** கோத்ரெஜ் லிக்விட் ஹேர் டை 20 மிலி மற்றும் 40 மிலி, பாட்டில்களில் கிடைக்கிறது. இரண்டு ஷேடுகளில், டார்க் ப்ரௌன் மற்றும் நேச்சரல் ப்ளாக். உங்கள் கேசத்தின் இயற்கையான வண்ணத்துக்கேற்றதைத் தேர்ந்தெடுங்கள்.




Godrej

கோத்ரெஜ்
பர்மனென்ட் லிக்விட்
ஹேர்டை

தெரிந்தவர்களுக்கு மட்டுமல்ல
உபயோகிக்க விரும்பும் புதியவர்களுக்கும்

கோத்ரெஜ் தயாரிப்பு.

CLARION/B/GS/22/203 TML

குறுநாவல்

# இப்படி ஒரு மாறுதல்

சுஜாதா

1

ஜனார்த்தனுக்குத் தன் வாழ்க்கையில் இப்படி ஒரு மாறுதல் ஏற்படப் போகிறது என்று தெரிந்திருந்தால் ஊருக்குப் போகாமலிருந்திருப்பார். ஜனார்த்தனுக்கு நாற்பத்தைந்து வயசு. ஒரு மாதிரியான அபாயகரமான வயசு. வயசாகிக் கொண்டிருக்கிறது என்று இயற்கை அவ்வப்போது டயாபடிஸ், ரத்த அழுத்தம், நரை, முதலிய அடையாளங்கள் மூலம் நினைவுபடுத்திக் கொண்டிருந்தாலும் அதைப் பிடிவாதமாக நம்ப மறுக்கும் வயசு. மாடிப்படிகள் எல்லாம் விறுவிறு என்று ஏற முடியும், டென்னிஸ் முதலான விளையாட்டுக்கள் ஆட முடியும் என்று இன்னமும் நம்பும் வயசு. பெண்களுக்கு நாம் இன்னும் கவர்ச்சிகரமாக இருக்கிறோம் அவர்கள் நம்மை இன்னும் விரும்புகிறார்கள் என்று தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளும் வயசு.

ஜனார்த்தன் நாற்பத்தைந்து வரை பணத்தைத் துரத்துவதிலேயே கவனமாக இருந்துவிட்டார். சம்பாதித்து அலுத்தாகிவிட்டது. எதற்காக இன்கம்டாக்ஸ் கொடுக்க வேண்டும் என்று மேலே சம்பாதிப்பதில் அர்த்தமற்று அலுத்துப் போய் நிறுத்தியவர். வீடா? ஏழு வீடு. பண்ணையா? பெரிய ஃபார்ம். நாயா? உயர்ரக டாபர்மன். கோடை வாசஸ்தலங்கள், ஷேர்கள் எத்தனையோ பார்த்தாகிவிட்டது. மனைவி. ஒரே பெண்ணை அமெரிக்காவில் கல்யாணம் பண்ணிக் கொடுத்து அங்கே போய் சில வாரங்கள் இருந்து அதையும் பார்த்தாகிவிட்டது. போகாத ஊரில்லை, நாடில்லை, பார்க்காத காட்சியில்லை, சந்திக்காத மனிதரில்லை.

எல்லாமே பணம் சம்பாதிக்கும் செல்வத்தைத் துரத்தும் அடிப்படையில்தான். இதனால் நிரந்தர சிநேகிதங்கள் அவருக்கு ஏற்பட்டது கிடையாது. அதைப்பற்றி அவர் கவலைப்பட்டதும் இல்லை.

அன்று வரை—

''போயிட்டு எப்ப வருவீங்க?'' என்றாள் மனைவி. வரவர அகலமாகக் குங்குமம் இட்டுக்கொண்டு அவன் தொழுகிற அம்மன் போலவே ஆகிக் கொண்டிருக்கிறாள். எப்போதாவது அவளைப் படுக்கையில் தொட்டுப் பார்த்தால் கையை மரியாதையாக விலக்கி, 'என்னங்க இப்ப இதெல்லாம்?' என்று... போகப் போகத் தெய்வீகத்தன்மை பெற்று விடுவதால் கிரீடம் போட்டுக் கொண்டு தலையை விரித்துக் கொண்டு, ''பக்தா'' என்றாலும் ஆச்சரியப்பட மாட்டார்.

அவ்வாறு மனைவி மாறிவிட்டதிலும் ஜனுவுக்கு அத்தனை கவலையில்லை. பெண் சகவாசம் என்பது இஷ்டப்பட்ட போது கிடைக்கிறபோது அது அவ்வளவு ஒன்றும் பெரிசாகத் தெரியவில்லை. வாழ்க்கையில் அடைய வேண்டியது என்று எதுவாவது பாக்கியிருக்கிறதா என்று யோசித்துப் பார்த்ததில் ஏதும் இல்லை என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தார் — அந்தப் பெண்ணைப் பார்க்கும் வரை—

2

விமான நிலையத்தில் கார் வரவில்லை. அதற்காக டூரிஸ்ட்டு ஐ. டி. டி. ஸி. கவுண்டரைத் தேடிப் போனார். அங்கே யாரும் இல்லை. இதுமாதிரி இதுவரை நிகழ்ந்ததில்லை. தேஷ்பாண்டே மேல் கொஞ்சம் கோபம் வந்தது. பரவாயில்லை. நாமே ஓட்டலைத் தேடிப் போகலாமே என்று விமான நிலையத்துக்கு வெளியே வந்து டாக்ஸி இருக்கிறதா என்று தேடினார். ஒடிசலாக ஒரு டாக்ஸி இருந்தது. விமான நிலையத்தின் சைஸுக்கு இது போதும் என்பது போல! அவருக்கு இந்தி அரைகுறை. டாக்ஸிக்காரன் பேசியது மராட்டி போல இருந்தது. 'ஒளாரிட் ஜஸ், ஒளாரிட் ஜஸ்' என்றார். அவன் 'காய், காய்' என்று விளித்துக் கொண்டிருக்கும்போது பின்னால் குரல் கேட்டது.

''ஸார்!''

திரும்பிப் பார்த்தார்.

''ஐ'ம் ஸோ ஸாரி, மை மிஸ்டேக்! உங்களுக்காகக் கார் கொண்டு வந்திருக்கிறேன். இரண்டு கார். சத்யன் மெஸேஜ் கொடுத்திருந்தார்.''

''பரவாயில்லை, ஏறக்குறைய டாக்ஸி பிடித்துவிட்டேன்'' என்றார் புன்னகையுடன்.

''வெரி ஸாரி, வெரி ஸாரி பிளேன் வரும் நேரத்தைத் தப்பாக எடுத்துக் கொண்டு...''



ஹெட் கிளார்க்: நம்ம 'சி' செக்ஷன் கிளார்க் தூங்கும் போது குறட்டை விடுறார் சார்!

மானேஜர்: சே! தினமும் இதே குற்றச் சாட்டுத்தானா...? இனிமேல் யாராவது தூங்காத போது குறட்டை விட்டால் மட்டும் வந்து சொல்லுங்க...!

—அ. தெய்வசிகாமணி

"அதனால் என்ன நீ..."

"என் பெயர் சாயா."

"டூரிஸ்ட் டிபார்ட்மெண்ட்டா?"

"இல்லை உங்கள் கம்பெனியில் வேலை செய்பவள்! பூனா கிளையில் எஸ். ஏ.யாக இருக்கிறேன். மிஸ்டர் தேஷ்பாண்டேயிடத்தில், அவர் வந்திருக்க வேண்டும். டில்லி பேசியிருக்கிறார்."

"தெரியும். நான்தான் அனுப்பி வைத்தேன்"

"நாளை வந்துவிடுவார். உங்களை கிளாரிட்ட்ஜினில் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டியது என் பொறுப்பு. லேட்டாக வந்தது தெரிந்தால் என்னைத் திட்டிவிடுவார்." அவள் இயல்பாக ஜனார்த்தனிடம் கைப்பெட்டியை வாங்கிக் கொண்டு மற்றொரு காரைப் போகச் சொல்லிவிட்டு அவர் ஏறிக் கொண்ட காரில் முன் ஸீட்டில் ஏறிக்கொண்டாள். ஏர்கண்டிஷன் குளிர் அதிகமாக இருந்தது. கார் டிரைவர் மிக வெண்மையான சீருடை அணிந்து மிக மரியாதையாக இருந்தான். அவனிடம் அவள் ஏதோ சொல்ல, நலுங்காமல் கிளம்பியது.

"உங்களை நான் முதல் தடவையாகப் பார்க்கிறேன். டெலிபோனில் உங்கள் குரலைக் கேட்டிருக்கிறேன். ஆன்யுவல் ரிப்போர்ட்டில் போட்டோ பார்த்திருக்கிறேன்."

"நீ மராட்டியா?"

"ஆம். ஆனால் தமிழ் தெரியும்."

"அட எப்படி?"

"சின்ன வயசில் அப்பா அம்மாவுடன் சென்னையில், ஆறு வருஷம் படித்திருக்கிறேன்."

"தட்ஸ் நைஸ்."

"அதற்காக என் தமிழைச் சோதிக்காதீர்கள். மறந்துவிட்டது."

"வேறு என்ன தெரியும் உனக்கு?"

"குஜராத்தி, இந்தி, பெங்காலி, கொஞ்சம் கொங்கணி. என் அப்பா கொங்கணிக்காரர்."

"நான் பாஷைகளைக் கேட்கவில்லை" என்றார்.

அவள் அவரைத் திரும்பிப் பார்த்துவிட்டு ஒருமுறை புன்னகைத்தாள். அவர் கேள்வியின் முழு அர்த்தமும் புரிந்தது போல. அந்தப் புன்னகை ஜனாவை சுவிட்ச போட்டாற் போல மாற்றிவிட்டது. அந்தப் பெண் மெலிதாக இருந்தாள். குட்டைக் கை ரவிக்கையும் காட்டன் சேலையும் அணிந்து அலம்பிவிட்ட பளிங்கு போலத் துல்லியமாக இருந்தாள். தலைமயிரைக் கச்சிதமாக வெட்டி, நகத்தை வெட்டி, லேசாகப் பவுடர் தீற்றல் லேசாக லிப்ஸ்டிக் எல்லாவற்றிலுமே ஒரு திறமையும் தெரிந்தது. அவளுக்கு இன்றைக்கெல்லாம் இருபத்திரண்டு வயசுதான் இருக்கும். பாலத்தைத் தாண்டும்போது நதியின் பெயர் எல்லாம் சொல்லிக் கொண்டு வந்தாள். ஏர்போர்ட் ஸ்டேஷன் இதுதான் என்று காட்டினாள். அவள் பேசப் பேச அவள்பால் ஈடுபாடு அதிகமாவதைத் தவிர்க்க முடியாது போல இருந்தது. கொஞ்சம் கான்வெண்ட் உச்சரிப்பில் பேசினாள்.

"மெட்ராஸ் ஆபீஸ் பார்த்திருக்கிறாயா?"

"இல்லை. ஆனால் ரொம்ப 'பாஷ்'ன ஆபீஸ் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்."

"மெட்ராஸ் ஆபீஸுக்கு வருகிறாயா?"

"ஒய் நாட்?" என்றாள்.

மறுபடி அதே சிரிப்பு.

ஜனாவுக்கு ரொம்ப நாளாக உறங்கிக் கொண்டிருந்த பழைய சிங்கம் ஒன்று விழித்தெழுந்தது. அவருக்கென்னவோ இ று ராத்திரிக்குள் இந்தப் பெண்ணைப் படு க யில் வீழ்த்திவிடலாம் என்று தோன்றி . உண்மைதான். அவர் கம்பெனி சிப்ப தி தான் அவள்! அதுவும் ஒரு ஆபீஸ் அஸிஸ்டண்ட். அவள் எங்கே, கம்பெனியின் சர்வ உரிமையாளனான அதன் இந்தியா ஓவர்ஸீஸ் கிளைகள் சேர்த்துச் சர்வத்திற்கும் அதிபதியான நான் எங்கே! தேஷ்பாண்டேக்குத் தெரிந்தால் சிரிப்பான். "பிஜே! உனக்குப் பெண்கள்தானே வேண்டும்! எத்தனை பேர்?" என்பான். ஆனால் லோகலாக ஆபீசில் கைவைக்காதே!" தேஷ்பாண்டேக்குச் சில காரியங்கள் பந்தாவாகச் செய்ய வேண்டும். எப்படி அவனிடம் இந்தப் பெண்தான் வேண்டும் என்று சொல்வது? சொல்ல வேண்டாம்! நல்லவேளை தேஷ்பாண்டே இல்லை. ராத்திரிக்குள் பார்த்துவிடலாம்!

ஓட்டல் வாசலில்" வண்ண விளக்குகளின் உதவியுடன் பார்பெக்யூ ரெஸ்டாரெண்டில் வெள்ளைக்காரர்கள் டிராயரில் மாமிசம் கடித்துக் கொண்டிருந்தார்கள். அந்தப் பெண் அவன் பெட்டியை எடுத்துக்கொண்டு ரிஸப்ஷனுக்குச் சென்று

''ஹி ஹாஸ்கம்!'' என்றாள் உற்சாகத்துடன்.

''இந்த ஓட்டலில் இருப்பது ஒரே ஒரு 'ஸூட்'தான். அதை உங்களுக்கு ரிசர்வ் செய்திருக்கிறது. ஸ்விம்மிங் பூலை நோக்கி நல்ல இடம்'' என்றான்.

அவனுடன் அறைக்குள் வந்து மணிப் பொத்தானை அழுத்தி, ''ஏதாவது வேண்டுமா உங்களுக்கு?'' என்றாள்.

''இதுவரை நீ தமிழ் பேசவே இல்லையே. அதை நான் கேட்க வேண்டாமா?''

''அது அப்புறம்'' என்று சிரித்தான். சிப்பந்தி உள்ளே வர, ''காப்பி!'' என்றாள். ''உங்களுக்குக் காப்பி பிடிக்கும் என்று தேஷ்பாண்டே சொல்லியிருக்கிறார்.''

''உனக்கு?''

''வில் ஷ்யர்!'' ஜனார்த்தன் உட்கார ''எதற்கு நிற்கிறாய். உட்காரேன்.''

''உட்காரக் கூடாது.''

''ஏன்?''

''பாஸ்.''

''அதெல்லாம் நாளைக்கு ஆபீஸில்.''

''இருந்தும் தேஷ்பாண்டேக்கு நான் இந்த அறைக்குள் நுழைந்தது தெரிந்தாலே வேலை நீக்கம் செய்துவிடுவார்.''

''அதெல்லாம் ஒன்றுமே நடக்காது. நான் யார் தெரியுமல்லவா?''

''தெரியும். அதனால்தான்!''

''நான் யார்?''

''நீங்கள்தான் கம்பெனியின் ஸி.எம்.டி. உங்களுடன் நான், ஒரு அற்ப சிப்பந்தி, பேசுவதே தப்பு. தேஷ்பாண்டே கொலை பண்ணிவிடுவார்.'' 'உனக்கு நான் என்ன சொன்னேன்? அவரை ஓட்டலில் சேர்ப்பித்துவிட்டுத் திரும்பி வர வேண்டியது தானே!''

''நான்தான் இருக்கச் சொன்னேன் என்று சொல்லிவிடேன்.''

''நீங்கள் இருக்கச் சொல்லவில்லையே?''

''இப்போது சொல்கிறேன். இரு! ஹேவ் டின்னர் வித் மி! நீச்சல்குளத்தின் அருகில்!''

''தாங்க்ஸ்'' என்றாள். கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டாள். பழைய கடிகாரம். புதிதாக இவளுக்கு வாங்கிக் கொடுக்க வேண்டும், தேஷ்பாண்டேக்குத் தெரியாமல்.



போது நீ பக்கத்து வீட்டு மாமாவைக் கல்யாணம் பண்ணிக்கொண்டாய்?''

சாயா சிரித்து ''வினோத்! இது நான் சொன்னேன் இல்லையா, மிஸ்டர் ஜனார்தன்.''

''ஓதி ஓல்ட் மேன் இன் லவ்! தர்மாத்மா''

''ஸார் இது வினய் தோட்போளே. என் ஃபியான்ஸி..''

''என்ன சொல்கிறாய்? சாயா உன் கணவன் பூனாவில்...''

''மன்னித்துக் கொள்ளுங்கள். அது என் கணவனில்லை. அன்றைக்கு பூனாவில் உங்களை ஏர்போர்ட்டில் சந்தித்து அழைத்துச் சென்ற போது ஓட்டல் அறையில் நீங்கள் அத்துமீறி பழக ஆரம்பித்தீர்கள். அந்த சங்கடத்தை சமாளிக்கவே என்னை இரவு வீட்டுக்கு அழைத்துச் செல்ல வந்திருந்த பக்கத்து வீட்டுக்கார பவ்டேகரை கொஞ்ச நேரத்துக்கு என் கணவனாக சொல்லிக் கொள்ள வேண்டியிருந்தது. அவரும் ஒத்துழைத்தார். தொடர்ந்து என்னைக் கல்யாணமானவள் என்று சொல்லிக் கொள்வதில் சில சௌகரியங்கள் இருந்தன. ஒரு எல்லைக்குமேல் உங்களால் அருகில் வரமுடியவில்லை... எனக்கு இனிமேல்தான் கல்யாணம் ஆகப் போகிறது. வினோத் எம்.பி.ஏ. முடித்ததும் ஸ்டேட்ஸ் போகப் போகிறான். நானும் போக உத்தேசம். விடுமுறைக்குச் சென்னைக்கு வரவழைத்தேன்...''

''சாயா உங்களைப் பற்றி எல்லாக் கடிதத்திலும் எழுதிவிட்டாள். உங்கள் ஃப்ளாட் ரொம்ப ரொம்ப வசதி, என்ன சாயா?'' என்று அவளைப் பார்த்துக் கண்ணடித்தான்.

ஜனார்த்தன் இடைவிடாத உபயோகத்தால் களைத்திருந்த படுக்கையைப் பார்த்தார். பவ்டேகர் பற்றி ஏதோ செய்தி சொல்ல வேண்டும் என்று ஜனார்த்தன் சிரித்துக் கொண்டே ''பவ்டேகர் ஒரு சாலை விபத்தில் இறந்துவிட்டார்'' என்றார். ஜனார்த்தன் வெளியே வரும்போது கூடச் சிரித்துக் கொண்டுதான் வந்தார். காரில் சிரித்தார். ஆபீஸில் சிரித்தார். சந்திரனைப் பார்த்துச் சிரித்தார். நர்ஸிங் ஹோமில் அட்மிட் ஆகி மயக்க மருந்து கொடுக்கிற வரைக்கும் சிரித்தார்.

(முற்றும்)

## கவிஞர் வைரமுத்து

# சிநேகத்தோடு சில வார்த்தைகள்



இளைஞனே வா!

உன்னிடம் சில வார்த்தை பேச வேண்டும் சிநேகத்தோடு.

ரகசியம் ஏதுமின்றி மனசைத் திறந்து காட்டும் மலர்களைப் போல நிஜங்களைப் பேசுவோம் நீயும் நானும்.

எதார்த்தத்தை விட்டு நீ எத்தனை கிலோ மீட்டரில் இருக்கிறாய் என்பது எனக்குத் தெரியும்.

இல்லாத ஓர் ஊருக்கு யாரும் சொல்லாத ஒரு வழியில் நீ தூக்கத்தில் நடப்பவனாய்த் தொடர்ந்து போய்க் கொண்டிருக்கிறாய்.

மயில்தோகைகளைப் பரப்பி மல்லிகைப்பூ தெளித்த சாலை உனது கனவாக இருக்கிறது.

ஆனால், காலில் ஆணியடித்துக்கொண்டு முட்களின் மீது நடப்பதுதான் உனது எதார்த்தமாக இருக்கிறது.

நாளையின் நம்பிக்கைச் சுடர் நீதான் என்று உன்னைப் போலி வார்த்தைகளால் புகழமாட்டேன்.

ஏனென்றால் — எரிந்து கொண்டிருப்பவனே நீதானே.

உனக்கும் உன் பெற்றோருக்கும் உறவு சரியில்லை.

உனக்கும் உன் ஆசிரியருக்கும் உறவு சுகமில்லை.

ஒரு கிழவியைக் கல்யாணம் செய்து வைத்த மாதிரி கல்வி உனக்குக் கசப்பாக இருக்கிறது.

உன்னைப் பயன்படுத்தும் அரசியல் தலைவர்கள் இருக்கிறார்களே தவிர உனக்குப் பயன்படும் சமூகத் தலைவர்கள் இல்லை.

உன்னைப் பற்றிக் கவலைப்பட இந்தியா தயாராக இல்லை.

எனவே இந்தியாவைப் பற்றிக் கவலைப் பட நீயும் தயாரர்க இல்லை.

எங்கே போகிறோம் என்று தெரியாமல் அலைகளின் முதுகில் சவாரி செய்யும் குமிழிகள் மாதிரி நீயும் குறிக்கோளில்லாமல் போய்க் கொண்டிருக்கிறாய்.

உன் முதுகுக்குப் பின்னால் பள்ளம்; முகத்துக்கு முன்னால் இருட்டு.

கண் பார்வை உனக்கு இருக்கிறதா இல்லையா என்று சோதித்துக் கொள்ளக் கூட அந்த இருட்டு உனக்குச் சந்தர்ப்பம் தரவில்லை.

ஆட்டுவித்தால் ஆடும் பொம்மைகளாய், சாவி கொடுத்தால் சுற்றும் சக்கரங்களாய் நம் இளைஞர்கள் இருந்தால் அடுத்த தலைமுறை நகராத கூவமாய் நசித்துவிடும்.

நதிக்கே நங்கூரம் பாய்ச்சிய அதிசயம் நம் ஊரில் மட்டும்தான்.

இளைஞனே! உன்னைப் பற்றி எனக்கு வருகிற தகவல்கள் என் குதூகலத்திற்கே குழி தோண்டுகின்றன.

எங்கே போகிறோம் இளைஞர்களே!

ஒரு கல்லூரி விடுதிக்கு இரவில் விலைமகளிர் வருவதாய் என் காதுக்கு வருகிறது.

பாவிகளே! அது கல்விச்சாலையா? கலவிச் சாலையா?

வேறொரு விடுதியில் ஒரு மாணவியின் கைப்பையில் போதை மாத்திரைகளும், கர்ப்பத்தடை மாத்திரைகளும் சரிவிகிதத்தில் இருந்ததாய்ச் சாட்சி கிடைத்திருக்கிறது.

அடி பாவிப் பெண்ணே! நீ மனத்தை நிரப்ப வந்தாயா? மடியை நிரப்ப வந்தாயா?

இந்த இளைய தலைமுறை தடுமாறிக்கொண்டிருப்பதற்கு யார் பொறுப்பு?

இவர்கள் இப்படி கனாக்காரர்களாய்த் திரிவதற்கு யார் காரணம்?

அவர்களுக்குள் அந்த ஆடை கட்டாத ஆசைகளை வளர்த்துவிட்டது எது?

வாழ்க்கையின் எதார்த்தம் பார்த்து இப்படி அஞ்சும் மனோபாவம் எப்படி வந்தது?

இவர்களின் முதுகெலும்பைத் திருடிக் கொண்டது யார்?

இவர்கள் உள்ளீடற்றவர்களாய் உருமாறியது ஏன்?

உங்களை நெறிப்படுத்தவும் சரிப்படுத்தவும் கூடிய சக்தி எது?

இவற்றையெல்லாம் உள்ளம் திறந்து பேசப் போகிறேன் உன்னோடு.

ஒரு மத போதகனாக அல்ல.

நீ அன்றாடம் வெறுக்கும் ஆசிரியனாக அல்ல;

உனக்கு இப்போது அந்நியமாக ஆகிப் போன தாய் தந்தையாகக் கூட அல்ல;

உன் நன்மை கருதும் நண்பனாய்...

உன்னைத் தொட்டுப்பழக உரிமை கொண்ட தோழனாய்.

இப்படிக்கு.

வைரமுத்து

புகைப்படம்: யோகா.

DECCAN HERALD
CLASSIFIEDS
JOB OPPORTUNITIES
EXCHANGE
Indian Airlines
Employment News
1. CHIEF ACCOUNTS MANAGER:
LIBRARIAN
RAILWAY SERVICE COMMISSION
WANTED
TEST YOUR KNOWLEDGE
CLASSIFIED
ADVERTISEMENTS

நமக்கெல்லாம் கதை கேட்பதில் ஒரு வித சந்தோஷம். ஸோ, முதலில் ஒரு கதை.

ஒரு புகழ் பெற்ற ஷூ தயாரிக்கிற கம்பெனியின் தலைவர், உலகப் படத்தை வைத்துக் கொண்டு, சீரியஸாக யோசித்தார். தம் கம்பெனி ஷூக்கள் அறிமுகம் செய்யப்படாத இரண்டு தீவுகளைத் தேர்ந்தெடுத்து இரண்டு விற்பனைப் பிரதிநிதிகளைக் கூப்பிட்டனுப்பினார்.

இருவருமே தீவுகளுக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

ஒருவாரம் போனது.

முதல் தீவிலிருந்து செய்தி வந்தது. வந்த தகவல், "தீவு மக்களிடையே காலணி அணிகிற பழக்கமே கிடையாது. விற்பனைக்குச் சான்ஸே இல்லை. திரும்பி வருகிறேன் அடுத்த ஃப்ளைட்டில்".

அடுத்த தீவிலிருந்து செய்தி வந்தது. வந்த தகவல் இதுதான். "இந்தத் தீவில், மக்களிடம் காலணி அணிகிற பழக்கமே கிடையாது. எனவே விற்பனைக்குப் பிரமாதமான எதிர்காலம். மேலும் ஆறு மாதங்கள் இங்கேயே தங்கி, ஆர்டர்களை அனுப்பிக் கொண்டிருக்கிறேன்."

* * * * *

தன்னம்பிக்கை, எந்த ஒரு விஷயத்திலும் பாஸிடிவ் அப்ரோச் இவை பற்றி பக்கம் பக்கமாய் எழுதப்படுகிறது. ஆனால் மேலே சொன்ன சில வரிக் கதை இதை ரொம்ப அழகாய், கச்சிதமாய் எடுத்துச் சொல்கிறது இல்லையா?

* * * * *

முன்பு 'எதிர்காலம் உங்கள் கையில்' என்ற தலைப்பில் பத்தாம் கிளாஸ், ப்ளஸ் டூ முடித்தவர்களுக்கு, 'மேற்கொண்டு என்ன படிக்கலாம்? எங்கே படிக்கலாம்?' என்ற தகவல்களைச் சொன்ன தொடர், பலத்த வரவேற்பைப் பெற்றது. இதை அடுத்து, 'படித்து முடித்தவர்களுக்கு உள்ள வேலை வாய்ப்புகள் பற்றின விஷயங்களை விரிவாய் எழுதினால் ரொம்பப் பயனுள்ளதாய் இருக்கும்' என்று 'கடித மழை' பொழிந்ததின் விளைவே இந்தத் தொடர்.

* * * * *

இஞ்சினீரிங், மெடிக்கல், சட்டப் படிப்பு போன்ற தொழிற் கல்வி படித்தவர்களுக்கு, வேலை கிடைப்பது பெரிய பிரச்னை இல்லை; போர்டை மாட்டிவிட்டு, சம்பாதிக்கலாம. (இதற்கும் தன்னம்பிக்கை, கய முயற்சி, கொஞ்சம் அதிர்ஷ்டம், எட்ஸெட்ரா தேவை என்பது வேறு விஷயம்.) ஆனால் பி. ஏ., பி. எஸ். ஸி. காரர்களின் எதிர்காலம் இன்று ஒரு '?' யாகவே உள்ளது என்பது ஒரு கசப்பான உண்மை. ஒப்பு நோக்குகையில் பி. காம். படித்தவர்கள் நிலை கூடத் தேவலாம்!

இப்படிப்பட்டவர்களுக்கு, இருண்ட பாதையில் ஏதோ ஒரு சிறு மெழுகுவர்த்தியை எடுத்துக் கையிலே கொடுத்து, 'ஆல் தி பெஸ்ட்' சொல்லி, வழி அனுப்பி வைக்கிற பணியைத்தான் இங்கே செய்ய உத்தேசம்.

* * * * *

ஒரு வேண்டுகோள்: தொடரைத் தொடர்ந்து படியுங்கள். சந்தேகம் ஏற்பட்டால் அல்லது விளக்கம் தேவைப்படும் பட்சத்தில் எழுதுங்கள். முடிந்த வரை தகவல்கள் தர முயற்சி செய்கிறோம். தயவு செய்து, பயோ—டேட்டாவை அனுப்பி, வேலை வாங்கித் தரச் சொல்லாதீர்கள், ப்ளீஸ்! இது எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச் இல்லை!

* * * * *

எந்த வேலையானாலும் அப்ளிகேஷன் போட வேண்டியது முதல் காரியம். அது விஷயமாய் சில டிப்ஸ்:

1. கூடுமானவரை வேலை வாய்ப்பு விளம்பரங்களை பத்திரிகையிலிருந்து கத்தரித்து எடுத்து வைத்துக் கொள்வது பெட்டர். எம்ப்ளாய்மெண்ட் நியூஸ் போன்ற வேலை வாய்ப்பு விவரங்களைத் தரும் பத்திரிகைகளையும் தினசரிகளில் வரும் அப்பாயிண்ட்மெண்ட் விளம்பரங்களையும் சலிக்காமல் புரட்டுங்கள்.
2. பாஸ்போர்ட் சைஸ் போட்டோக்கள் எந்த சமயத்திலும் இரண்டு, மூன்று பிரதிகள் கைவசம் வைத்திருப்பது அவசியம்.
3. விண்ணப்பங்களைக் கையால் எழுதுவதைத் தவிர்த்து, டைப் செய்து அனுப்புவது நல்லது. (குறிப்பிட்டுக் கேட்டால் கையால் எழுதித்தான் அனுப்ப வேண்டும்.)
4. கடைசித் தேதி வரை காத்திருக்க வேண்டாம்.
5. விண்ணப்பத்தில் எக்ஸ்ட்ரா கரிகுலர் ஆக்டிவிடீஸ் விவரங்களை விரிவாகக் குறிப்பிடவும்.
6. எக்காரணம்கொண்டும்கார்பன் காப்பி பயோ—டேட்டாவையோ, சைக்ளோஸ்டைல்டு பயோ—டேட்டாவையோ அனுப்புவது வேண்டாம்.
7. போஸ்டல் ஆர்டர், டிமாண்ட் டிராஃப்ட், கேட்டிருக்கிற சர்ட்டிஃபிகேட்டுகள் இவற்றை விண்ணப்பத்துடன், நூலால் இறுகக் கட்டி அனுப்பவும்.
8. ஏதாவது காரணங்களால், ஒரு சில விஷயங்கள், அப்ளிகேஷனில் குறிப்பிடுவதில் தாமதமானால், அவற்றைத் தனித் தாளில் குறித்து வைத்துக் கொண்டு அவற்றைப் பூர்த்தி செய்து முடித்ததும், ஒன்று ஒன்றாக அடித்துக் கொண்டே வரவும். எதுவும் விட்டுப் போகாமலிருக்கும். என்றாலும்...
9. ...விண்ணப்பத்தை அனுப்பு முன் கடைசியாய் ஒரு தடவை எல்லா விவரங்களும் சரியாய்ப் பூர்த்தி செய்யப்பட்டாகி விட்டதா என்று செக் பண்ணவும்.
10. எதற்கும் விண்ணப்பத்தின் பிரதியொன்றையும், விளம்பரக்கட்டிங்கையும் கையில் வைத்துக் கொள்வது நல்லது.

இவை சம்பந்தமான சிரமங்களால் அலுப்படையாதீர்கள்; அப்ளை, அப்ளை; நோ ரிப்ளை என்றாலும் அப்ளை!

அடுத்த வாரம் மறுபடி சந்திப்போம். எந்தெந்தத் துறைகளில் எந்தெந்த விதமான வேலை வாய்ப்புகளுக்கு முயற்சி செய்யலாம் என்பதை விரிவாகப் பார்ப்போம்.

— எஸ். சந்திர மௌலி.

# எதிர்காலம் உங்கள் கையில்

# மோகினித் திருக்கோலம்

**ஸ்ரீ வேணுகோபாலன்**

## 26

## காதலிக்க ஒரு இதயம் போதாது!

ராபர்ட் கிளைவின் முன்னே பணிவுடன் நின்றவர் சங்கரசுப்பிரமணியம் என்ற ஒற்றர். இங்கிலீஷ்காரரின் தலைமை ஒற்றர்களில் ஒருவர். சென்னையிலிருந்து வந்திருந்தார். மூன்று நாட்கள் ஆர்க்காட்டுக் கோட்டைக்கு வெளியே காத்திருந்தார். கோட்டைக்குள் எப்படிப் போவது? நவாப் படை சூழ்ந்து கொண்டு இருக்கிறது.

லஞ்சத்தைப் போல எளிதான திறவுகோல் உலகத்தில் ஏது? யார் படையாக இருந்தால் என்ன? படையில் சேர்ந்திருக்கும் வீரன் ஊதியத்தை நம்பித்தானே சேர்ந்திருக்கிறான்? நாட்டுப் பற்று சிறிது இருக்கலாம். ஆனால் அதெல்லாம் ஊதியத்திற்குப் பிறகுதான்! மேலும் நாடு என்று கொள்ளும் அளவுக்கு ஒரு நாடும் அந்தக் காலத்தில் உருப்படியாக இல்லை.

நவாப படையின் தளகர்த்தர் இருவருக்கு லஞ்சம் கொடுத்தார். கோட்டையில் தெற்குப் பாரிசம் வழியாக இரவில் உள்ளே போவதற்கு அனுமதி பெற்றார்.

பிறகு கோட்டை உப்பரிகைக் காவலுக்கு அவர் யார் என்று அறிமுகம் செய்து, அதை காவல்காரன் தன் மேலதிகாரிகளிடம் சொல்லி அவர்கள் சங்கரசுப்பிரமணியத்தை அடையாளம் கண்டு கொண்டதும்,

பிறகு ஒரு கூடையைக் கீழே இறக்கி அதன் மூலம் அவரை மேலே இழுத்துக் கோட்டைக்குள் கொண்டு சென்றதும் வெகு அவசரமாக நடந்து விட்டன.

தளபதி லாண்டர்ஸிடமிருந்து கடிதம் கொண்டுவந்திருந்தார் அவர். சங்கேதமொழியில் எழுதப்பட்டிருந்தது. கிளைவ் அதை வாங்கித் தமது மெய்க்காவலரிடம் கொடுத்தான். அவர்கள் சொற்ப நேரத்தில் அந்த சங்கேதத்தை அவிழ்த்துக் கொண்டு வந்தார்கள். கிளைவ் அதை வாங்கிப் படித்தான்

அவன் முகம் சரியாகக் கனியவில்லை.

காலில் கட்டுப் போடுகிறவரைப் பார்த்து ''ஆயிற்றா?'' என்று கேட்டான்.

தலையை ஆட்டி விலகினான் அவன்.

கிளைவ் திரும்ப ஒருமுறை கடிதத்தைப் படித்து, ''தாமஸ்!'' என்றான்.

தாமஸ் தனது ராணுவ உடையில் முன்னால் வந்தான்.

''உதவி கிடைக்க ஒரு வாரம் ஆகும் என்கிறார்கள்.''

முகத்தைக் கடுமையாக்கிச் சொன்னான் கிளைவ்!

''ஒரு வாரம்!'' என்று பயம் பொங்கக் கேட்டான் தாமஸ்!

கிளைவ் பதில் சொல்லவில்லை.

''இன்னும் மூணு நாள் தாக்குப் பிடிக்க முடியாது. அரிசி, கோதுமை எல்லாம் காலி! சிப்பாய்கள் அரைப் பங்கீட்டில் இருக்கிறாங்க! பட்டினி வயிறு போர் செய்யாது!'' என்றான் தாமஸ்.

''கோட்டைப் பாதுகாப்பு சிதைந்துவிடும். காவலில் பாதிபேர் நோயாளிகள்'' என்றான் பாட்ரிக்!

''லஞ்சம் கொடுக்கப் பணமில்லை. இனிமேல் பொருள்கள் உள்ளே வராது!'' என்றார் கிடங்கு அதிகாரி.

(கோட்டை முற்றுகையில் இருந்தால் லஞ்சம் கொடுத்துத்தான், உணவுப் பொருள்களை உள்ளே கொண்டு வந்தார்கள்.)

''மிஸ்டர் ஷங்க்!'' என்றான் கிளைவ். சங்கர சுப்பிரமணியத்தை நோக்கி, ''உனக்குத் தெரியுமா, நாங்கள் எவ்வளவு கஷ்டப் படுகிறோம் என்று! லாண்டர்ஸுக்கு இது புரியாதா? முற்றுகையை அவர் பார்த்ததில்லையா?'' என்றான் ஆற்றாமையோடு.

''ஸர்!'' என்றார் சங்கரசுப்பிரமணியம். ''எல்லா உதவியும் இப்போது திருச்சிராப்பள்ளிக்குப் போய்க் கொண்டிருக்கிறது. அங்கே முகம்மதலி தக்க வசதி இல்லாமல் புலம்பிக் கொண்டிருக்கிறார். உங்கள் பாடாவது தேவலை! உள்ளே இருப்பவர்கள் ராணுவப் படையினர்தான்! 'திருச்சிறைப்போலி'' கோட்டைக்குள் இருப்பவர்கள் சாதாரண ஜனங்களும் கூட! முற்றுகையில் அவர்கள் கலகலத்துவிட்டார்கள். முகம்மதலிக்கு எதிராகத் திரும்பக் கூடாது அல்லவா? ஆகவே உதவி அனுப்ப வேண்டிய முதன்மையை 'திருச்சிறைப்போலி' பெறுகிறது'' என்றார்.

''ஷங்க்! நாங்களும் ஒரு மோச நிலைக்கு வந்துவிட்டோம்! இதிலிருந்து தப்ப வழியில்லை! லாண்டர்ஸிடம் சொல்லு! உதவி வந்தால் இன்னும் இரண்டு மூணு நாளில் வரவேண்டும்! இல்லாவிட்டால் எங்கள் கதி அதோகதி ஆகிவிடும்!'' என்றான் கிளைவ்.

பிறகு, "அந்தத் திருப்பதிப் பணம் என்ன வாயிற்று! அது வந்தாலாவது சமாளிக்க லாமே!" என்று கூறினான் அவன்.

"அதற்குத்தான் பணயம் வாங்கி உங்களிடம் அனுப்பித்து வைத்தார்கள்!"

"பணயம் வந்து சேரவில்லையே!"

"அதைக் குறித்துத்தான் ஸாண்டர்ஸும் கவலைப்படுகிறார். பொம்மராஜு ஜமீனின் மகன் எங்கே போனான், தெரியவில்லை" என்றார் சங்கரசுப்பிரமணியம்.

"வழியில் யாராவது கடத்தியிருப்பார்கள்!" என்றான் கிளைவ்.

"தீவிரமாக அவனைத் தேடுகிறோம். நிச்சயம் திருப்பதிப் பணம் தங்களுக்குத்தான் வரும். அதை வேறு உபயோகத்துக்குத் திருப்பக் கூடாது என்று கண்டிப்பாகக் கவர்னர் உத்தரவு போட்டிருக்கிறார்."

"போடட்டும்! இங்கே பணம் வந்தால் தானே ஆயிற்று! வரவில்லையே! இன்னும் யாரையாவது கார்வேட் நகரம் அனுப்புவது தானே?"

சங்கரசுப்பிரமணியம் மௌனம் சாதித்தார். "நல்லது! நீங்கள் இன்னும் ஒருநாள் இருங்கள்! இங்கே நடப்பதை நேரில் பாருங்கள்! நான் கடிதம் எழுதித் தருகிறேன்!" என்றான் கிளைவ்.

பிறகு சட்டென்று எழுந்திருக்க, வாசல் பக்கம் ஏதோ சலசலப்பு ஏற்படுவது தெரிந்தது.

அதை அடுத்து இரண்டு பேர் ஒரே இரைப்புடன் வந்து நின்றார்கள்.

* * * * *

மதாம் தூப்ளே கூறியதைக் கேட்டு ஆச்சரியப்பட்டிருந்தான் வர்மன்.

திருப்பதிப் பொருளின் மீது எத்தனை பேர்களுக்குத்தான் ஆசை!

அத்தனை பேரும் கேட்கிறார்களே!

இப்படிக் கேட்பதற்கு ஏதாவது நியாயம் கியம் இருக்க வேண்டாமா?

அந்தப் புண்ணியப் பொருளைத் தொடுவதற்கு அருகதை அற்றவர்கள் எல்லாம் அதைக் கேட்கிறார்களே?

சிந்துவை இரண்டு நாளாய்க் காண முடியவில்லை. எங்கேயாவது பயணம் போய் விட்டாளா? உடன்படிக்கைக் குழு அவளை அழைத்திருக்குமோ!

அவனது மனத்தை அன்று திறந்து அவளிடம் சொல்லியதிலிருந்து அவனுக்குச் சுமை இறங்கிய உணர்ச்சி வந்து விட்டது. சுகனத்தில் மிதக்கும் உணர்ச்சி அவனைத் தழுவியது. 'வீரரே! நீர் படுவதை நான் படவில்லை என்று ஏன் எண்ணுகிறீர்கள்? நிச்சயமாய் நானும் படுகிறேன். ஆனால் பொறுங்கள்!



சீக்கிரம் 'என் மனத்தை வசைப்படுத்திக் கூறுகிறேன். ஆனந்தத்தில் அது இப்போது அல்லாடுகிறது. அதன் தத்தளிப்புகள் முடியட்டும்!' என்று கூறியிருந்தான்.

ஆனால் போகும் போது அவன் இன்னும் தவிப்பதைப் பார்த்து, "இன்னும் தளர்ச்சி ஏன், வீரரே! உங்கள் நினைப்புதான் என் நினைப்பாகவும் இருந்து வருகிறது! இதில் சந்தேகம் இல்லை! இவ்வளவு சொன்னால் போதாதா!" என்று கூறி அவனைச் சமாதானப்படுத்திச் சென்றான்.

நல்லவேளை! கடைசியாக அவன் அப்படிச் சொல்லிச் சென்றதன் காரணத்தால்தான் அவன் இப்போது ஆனந்தப்படுகிறான். மனம் பறவை போலப் பறக்கிறது. தந்தை கிடைக்காத துக்கம் கூடச் சற்று மிதமாகி வருகிறது.

நினைவில் மூழ்கியவனாய் வர்மன் அந்தக் காலையில் நடந்து செல்ல, சீக்கிரம் சீமான்கள் சாலையை அணுகினான்.

வரிசையாகத் தோட்ட வீடுகள் தென்படத் தொடங்கின.

பசுமையும் குளுமையும் நிறைந்த கொடி செடி வர்க்கங்கள் அவன் மனத்துக்கு இதத்தை அளித்தன.

வாசலில் பீரங்கி வண்டி வைத்திருக்கும் அடையாளத்தைத் தேடிக் கடைசியில் அந்தப் பங்களாவுக்குள் நுழைந்தான்.

பெரிய முகப்பில் சாரட்டு ஒன்று பளபள என்று நின்றது.

உள்ளே பியானோவிலிருந்து எழுந்த சங்கீதத் துணுக்குகள், சின்னச் சின்னப் புஷ்பங்களாக மிதந்து வந்தன.

அந்த ஐரோப்பிய இசை அவன் மனத்தை கிறங்கி விட்டது. கைகளைக் கோர்த்து சிறிது நேரம் நின்றான். பிறகு கயிற்று மணியை இழுக்க, உள்ளே 'கலிங்' என்று சத்தம் எழுந்தது.

வேன்ஸான் வெளியே வந்து பார்த்தார்! "அடேடே! வர்மனா? வா! வா! இன்னும் வரவில்லையே என்று பார்த்தேன்!" என்று சொல்லி உள்ளே அழைத்துப் போனார்.

ஹால் பூராவும் பிரெஞ்சு மோஸ்தரில் இருந்தது. பெரிய கப்—போர்ட்டுகளும் அலமாரிகளும் மூலைக்கு மூலை கரும் பளிங்குகளால் ஒளி வீசின.

மேலே விதானங்களில் மூன்று வித சேண்டிலியர்கள் தொங்கிக் கொண்டிருந்தன.

ஒரு லூயி பதினான்கு நாற்காலியில் உட்கார்த்தி அவனிடம் பேசினார் அவர்.

மதாம் தூப்ளேயிடம் இரண்டாம் முறை போய் வந்ததையும் திருப்பதிப் பணத்தைக் கொண்டு வரச் சொல்லி அவன் கேட்டுக் கொண்டதையும் கூறினான் வர்மன்.

"அதெல்லாம் இருக்கட்டும்! செஞ்சுகாவைப் பார்த்தாயா?" என்று கேட்டார் வேன்ஸான்.

"பார்த்தேன்!" என்றான் வர்மன்.

"உனக்கு ஒரே ஆனந்தம் ஏற்பட்டிருக்குமே!" என்றார் அவர்.

"ஆமாம் துரை!" என்றான் அவன்.

"இப்போது கூட ஒவ்வொரு கணமும், ஒவ்வொரு விநாடியும் அவள் நினைவு வந்து கொண்டிருக்குமே!" என்றார் வேன்ஸான்.

வர்மன் அவரை ஏறிட்டுப் பார்த்தான். முகம் பூராவும் புன்னகை மயமாய் இருந்தார் வேன்ஸான்.

தோற்றத்தில் கூட உல்லாசம் அல்லாடியது.

வேன்ஸான் உடனே பாடினார். பிரெஞ்சுப் பாடல் அது. மனத்தை அள்ளி எடுத்து உணர்ச்சிக் கடலாய்ப் பாடினார்.

'லமூர் ரேங்! லெ ஸாங் புய்யோன்!
ல'ன்னே எ போன்!'

என்ற கடைசி வரிகளைத் திரும்பத் திரும்பப் பாடினார் அவர்.

அவர் நிறுத்தியதும் நிசப்தம்! எனினும் அவர் பாடிய வரிகள் இன்னும் சுழிகளாக அங்கே குமைந்து, உலைந்து, கலைந்து உலாவுவது போல் இருந்தது.

"துரை!" என்று அவரைக் கலைத்தான் வர்மன். அவர் கண்களில் பளிங்கு போல் உணர்ச்சித் திவலை ஒன்று உறவாடியது.

"இது என்ன அர்த்தம்! யார் பாடினார்கள்?" என்றான் வர்மன்.

"வர்மா!" என்று கவிதைக் கனிவான குரலில் அழைத்தார் அவர். இன்னும் அவர் உணர்ச்சியை விட்டு அகன்றாரில்லை. "என் பெயரை உடைய ஒருவர்தான் இதைப் பாடினார். 'வேன்ஸான் உவாத்தூர்' என்பது அவர் பெயர். மூணு வருடங்களுக்கு முன் தான் இறந்தார்.

'சூரியன் நம்மோடு நெருக்கமாகி, உலகை
எல்லாம் வெம்மை செய்கிறான்
காதல் எங்கும் அரசு ஆள,
ரத்தம் எல்லாம் வெம்மை ஆகிறது
நல்ல ஆண்டு இது.'

"வர்மா! காதலின் வெம்மை பட்டால் எங்கும் குதூகலம்தான்! நீ அதில் இப்போது மிதப்பாயே!" என்றார்.

வர்மன் தத்தளித்தான்.

"வர்மா! கீழை நாட்டில் நாம் நிறையப் பறிகொடுத்துவிட்டோம். தலையாய இழப்பு நமது 'காதல்'! காதல் செய்வதை மறந்துவிட்டோம். இழந்து விட்டோம். வாழ்க்கையின் ஒரு ஜீவ ஊற்றை முற்றிலும் துறந்துவிட்டோம். பரீஸுக்கு (பாரீஸ்) போ! அத்தனைப் பெண்களும் காதல்கள்தான்! அத்தனைப் பார்வையும் காதல்கள்தான்! அப்பா நான் மறக்கவே மாட்டேன் அந்த நினைவுகளை! அந்த நகரில் காலடி வைத்ததும்தான் சுவர்க்கத்தை அனுபவித்தேன், வர்மா! காதலிக்க ஒரு இதயம் போதாது! ஆயிரம் இதயங்கள் வேண்டும்! ஒருத்தரை மட்டும் அல்ல, அத்தனை பேரையும் காதலிக்க வேண்டி வரும்!" என்றார் வேன்ஸான்.

வர்மன் சிரித்தான்.

"அத்தனைப் பெண்களையுமா?" என்றான் வர்மன்.

''ஆமாம்! வர்மா! இதிலென்ன தப்பு இருக்கிறது? பார்க்கிற பெண்கள் எல்லாம் காதல்தான். ஒவ்வொருவர் கண்ணும் உன்னைப் பிழிந்து எடுக்கும். ஒரு விஷயம் தெரியுமோ? ஒரு காதலியை உன்னால் தேர்ந்தெடுக்க முடியாது! அவ்வளவு பேர் இறைந்து கிடப்பார்கள்!'' என்றார் வேன்ஸான்.

''துரை! அத்தனைப் பேரைக் காதலிக்கலாமா?'' என்றான் வர்மன்.

''வர்மா! உன் மனம் அதை ஏற்காது! முதன் முதலில் மனம் ஒற்றைக் காதலை ஏற்காது. பார்க்கும் இடம் எல்லாம் அல்லாடும், கிறங்கும்! மதி மயங்கும்! அந்த உன்னத அனுபவத்தை வர்ணிக்கக் கூட முடியாது. உலகம் பூராவும் ஒரு காதல் மண்டலமாகத் தோற்றம் காட்டும். நீ பறப்பாய்! வர்மா! பறப்பாய்!''

''நீங்கள் நிறையப் பேரைக் காதலித்தீர்களா?'' என்றான் வர்மன்.

''ஆமாம் தம்பி! முதலில் அப்படித்தான். மனம் வண்ணத்துப் பூச்சியாகப் பறந்தது. பிறகு ஒருநாள் ஒரு வீட்டுக்குப் போனேன். சாப்பிட அழைத்திருந்தார்கள்! அந்த வீட்டுக்காரியும் அவள் மகளும் பரிமாறினார்கள். கடைசியில் சாப்பிட்டுவிட்டு வெளியே வந்தேன். 'ஐயா! இதை மறந்து விட்டீர்கள்!' என்று நான் மறந்து போன கைத்துணியை என்னிடம் தந்தாள் அந்த இளம்பெண்! அப்போது அவள் பார்த்த பார்வை, அதில் கைது ஆகி நின்ற நான் நின்ற மருட்சி, எங்கள் இருவர்க்கும் இடையே ஓடிய பல சுவர்க்கமயமான கணங்கள்! எல்லாமே எங்கள் விதியை நிர்ணயித்து விட்டன. என் ஆன்மா அவளைக் காதலிக்கத் தொடங்கி விட்டது. அவளை அது தேர்ந்து எடுத்துவிட்டது. அவள் என் மனைவி ஆனாள்!'' என்றார்.

வர்மனின் மனம் நினைவுகளில் அல்லாடியது. சிந்து! ஒரு நதியைப் போல ஆழம், அமைதி, கம்பீரம், சோபை, சௌந்தரியம்.

செஞ்சுகா! ஒரு கடலைப் போல் கொந்தளிப்பு, ஆர்ப்பரிப்பு, உக்கிர அழகு, ஓய்வடையாத தத்தளிப்பு!

நதிக்கும்கடலுக்குமிடையே அவன் மனம் அல்லாடுகிறது.

மனத்தின் அந்த வேதனையை, தவிப்பை வேன்ஸான் பேசிய பேச்சுக்குப் பின்னால் தான் இன்னது என்று உணர முடிந்தது.

வேன்ஸான் 'பரீஸ்' பற்றி இன்னும் பேசிவிட்டு அவனைச் சாப்பிட அழைத்துச் சென்றார்.

உடம்பு சரியில்லாமல் இருக்கும் தம் மனைவி திருமதி ழியான் வேன்ஸானைக் காண்பித்தார். அறிமுகம் செய்தார்.

மேஜைக்கு அழைத்துப் போனார்.

அவன் உட்கார்ந்ததும், வேன்ஸானின் மகள் மதில்தா ப்ளேட்களைக் கொண்டு வைத்தாள். மகளை அறிமுகம் செய்தார் வேன்ஸான்! பன்னிரண்டு பதிமூன்று இருக்கும்! மதாம் ழியானின் சாயல் அப்படியே இருந்தது.

அவள் பரிமாற அந்த 'சூப்' வகையறுக்களை வர்மன் எச்சரிக்கையாக ருசி பார்த்தான்.

வேன்ஸான் சற்றுத் தள்ளி ஒரு கோப்பை மதுவில் ஐக்கியமாகி, புகைத்துக் கொண்டிருந்தார்.

ஒருவாறு உணவுகளை ஒரு விதமாக முடித்துவிட்டு, வேன்ஸானிடம் கடைசி விடைபெற்று, வர்மன் வெளியே வந்தான்.

'மதாம் தூப்ளே சொன்ன ஆணையை நிறைவேற்று! சீக்கிரம் இங்கே வா! உனக்கு நல்லதுகள் நடைபெறும்' என்று சொல்லி வழி அனுப்பினார் வேன்ஸான்!

தெருவில் சிறிது தூரம் போயிருக்கமாட்டான். ''மிஸ்ஸிய! மிஸ்ஸிய!'' என்று மெல்லிய குரல் அழைக்கத் திரும்பினான்.

அந்த இளம்பெண் மதில்தா தன் கவுன் நுனிகளைத் தூக்கிக் கொண்டு ஓடி வந்தாள்.

''இந்தாருங்கள்! உங்கள் கைவாள்! இது விட்டு விட்டீர்களே!'' என்று அவனிடம் கொடுத்தாள்.

திடுக்கிட்டு அவன் அவளைப் பார்க்க, அந்த இளம்பெண்ணின் கண்ணின் வழியே ஏழுலகக் காதல் வசியமும் மிதந்து வந்தது.

சுருக்கென்று பொறிதட்ட நின்றான். மனம் எங்கேயோ பிழிபட்டது. வேன்ஸான் சொல்லியது அவனுக்கே நடக்கிறதோ?

கடவுளே! உலகத்தில் யாரைப் பார்த்தாலும் 'காதல்' என்றாரே! வேடிக்கை என்று நினைத்தேன்! அப்படி இல்லையோ?

வாளைச் சட்டென்று வாங்கி இடுப்புப் பட்டையில் செருகினான். ''நன்றி சொல்லுகிறேன் வரேன்'' என்று கூறி விறுவிறுப்பாக நடந்தான்.

தெருவளைவுக்கு வந்திருப்பான். மரநிழல் ஓரம் நிற்கும் உருவத்தைக் கண்டு திடுக்கிட்டான்.

சிந்து நின்று கொண்டிருந்தாள்.

''வீரரே! வேன்ஸான் வீட்டை விட்டு வர மனம் இல்லையோ! புறப்படுங்கள் அவசரம்! நாம் புதுச்சேரி விட்டுப் போகிறோம்!'', என்றான்.

அவள் கூறியது அவன் மனத்தைத் தைத்தது.

(தொடரும்)



''ஏண்டி! எங்கேயாவது பணம் கடன் வாங்கியாவது உனக்குப் பட்டுப் புடவை வாங்கிக் கொடுக்கச் சொல்றியே, வாங்கின கடனை எப்படித் திருப்பிக் கொடுக்கிறது?''

''இதப் பாருங்க! ஒரே நேரத்தில் இரண்டு வெவ்வேறு பிரச்னைகளை யோசிச்சுக் குழப்ப வேண்டாம்னு உங்களுக்கு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்!''



* பொன்ராஜ் குமார், கமுதி

? இந்த வருடம் ஊட்டி கொடைக்கானல் எங்காவது சென்றீர்களா?

! பூ! ஊட்டி, கொடைக்கானல் மட்டுமா? அமெரிக்கா முதல் ஃபார்மோஸா வரை; உள் நாட்டில் இமயம் முதல் குமரி வரை எல்லா இடங்களுக்கும் சென்று வந்து கொண்டிருக்கிறேன் — கல்கி 1985 விடுமுறை மலர் தயாரிப்பில் ஈடுபட்டிருப்பதால்.

* ஏ. ஜகுமார், காஞ்சிபுரம்.

? உங்கள் நெஞ்சை விட்டு நீங்காத கவியரசனின் கவிதை வரிகளைச் சொல்லுங்களேன்?





* 'தி கிரேட்'! * மலைப்பு!

! தாகூர் முதல் இன்றைய இளந்தேவன் வரை எத்தனையோ பேர் கவியரசர் பட்டத்துக்குச் சொந்தம் கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் எந்தக் கவியரசரைக் குறிப்பிடுகிறீர்கள்?

* உ. அசோக் பாபு, மணப்பாறை.

? ஆர். எம். வி. — ஜெயலலிதா சச்சரவுகள் எப்போ தீரும்?

! மூக்கிருக்கும் வரை ஜலதோஷமும் விட்டு விட்டு வந்து கொண்டேதான் இருக்கும்.

* என். உலகநாதன், லால்குடி.

? அன்பு என்பது எது வரை?

! இன்ஃபினிடி வரை. காலத்தாலும் தூரத்தாலும் பாதிக்கப்படாதது தூய அன்பு.

* எம். ஷர்புதின், தோப்புத்துறை.

? புருடென்ஷியல் வெற்றி, ஆசிய வெற்றி, பென்சன்—ஹெட்ஜஸ் வெற்றி, ரோத்மன்ஸ் வெற்றி — எதில் த்ரில் அதிகம்?

! ஒரு நாள் கிரிக்கெட்டில் முதன் முதலாக இறுதி வெற்றி, உலகளாவிய வெற்றி, அதுவும் வெஸ்ட் இண்டீஸைப் பணிய வைத்த வெற்றி, அதுவும் லாயிட் தி கிரேட் காப்டனாக இருக்க அவரை முறியடித்த வெற்றி! அப்போது ஏற்பட்ட அளவுக்கு த்ரில் அப்புறம் உண்டாகவில்லையே! எத்தனையோ இரவுகள் தொடர்ந்தாலும் முதல் இரவுக்கு ஈடாகுமா!

* வி. ரவிகுமார், லால்குடி

? மகாபாரதத்தில் தங்களைக் கவர்ந்த கதாபாத்திரம்?

! பாசம், கடமை இவற்றுக்கு இடையே தத்தளித்து மருகும் கர்ணனுக்கு ஈடாக வேறு யாரைக் கூற முடியும்? இன்றைய திரைக் கதைகளுக்கு அஸ்திவாரமாக இருக்கும் emotional conflict, inter action போன்றவையெல்லாம் அவனிடமிருந்து ஆரம்பமானவைதான்.

* மு. மதிவாணன், கரூர்.

? கதை சொல்வது, கதை கேட்பது எது பிடிக்கும்?

! கதை சொல்வது வேலையாகிப் போய் விட்ட நிலையில், உழைப்பைக் கறந்து விடுகிற சூழலில், கதை கேட்பது தான் ஜாலி — அதற்கு நேரம் ஒதுக்க முடியுமானால்!

* வி. எஸ். பழனி வேல், விக்கிரமம்.

? பெற்றோர் பிள்ளைகளுக்குக் கொடுக்கும் சுதந்திரம் தானே பின்னால் அவர்கள் கட்டுக்கடங்காமல் கெட்டுப் போகக் காரணமாகிறது?





* பம்பாய் ... ... வாசிகளுக்குப் ...

! பிள்ளைகளுக்குச் சுதந்திரம் கொடுத்து வளர்க்காவிடில் அடிமை மனப்பான்மை வந்து விடாதா? தன்னம்பிக்கை போய் விடாதா? சுதந்திரம் என்பது பொறுப்புணர்வோடு பயன் படுத்தப்பட வேண்டியது என்பதை உணர்த்தி வற்புறுத்தி வந்தால் போதுமானது.

# ஆர். எம். வீ.-ஜெயலலிதா

* ஆ. கணேசன், சென்னை—15.

? பஞ்சாயத்துத் தேர்தலாமே? அப்படியென்றால் என்ன? அது கடைசியாக எப்போது நடந்தது?

! கொஞ்சம் பொறுங்கள்; அகழ்வாராய்ச்சி இலாக்காவில் விசாரித்துச் சொல்கிறேன்!

* கருணிமகன், தாராபுரம்.

? கணவன் மனைவியிடம் 'ம' போட்டுப் பேசலாமா?

! 'ம' போட்டுத் தந்து பேசலாம்.



... புத்தாண்டு ...



... வாழ்த்து ...

* அரவிந்தன், சித்தமல்லி.

? உங்களை மலைக்க வைத்துக் கொண்டிருப்பவர் யார்?

! மீ.ப. சோமு. அ.இ.ரே. யிலிருந்து ஓய்வு பெற்ற இந்த முந்நாள் கல்கி ஆசிரியர், ஓய்வு பெற்ற பின் முன்னிலும் சுறுசுறுப்பாகி விட்டார். தமிழ்ப் பண்பாடு இயக்ககத்தின் இயக்குனராகத் தமிழக அரசுப் பணியாற்றினார். கல்கிக்கு நிறையவே எழுதினார். தமிழ் இசைச் சங்கம் தொடர்பான பணிகள், 'இந்து மதம் அழைக்கிறது' பத்திரிகையின் ஆசிரியராக இருந்து ஆற்றும் பணிகள் — இவை போதாதென்று இப்போது மேலும் ஒரு பெரிய புதிய பொறுப்பு ஏற்றுள்ளார். அண்ணாமலை பல்கலைக் கழகத்தின் தமிழாராய்ச்சிப் பேராசிரியராக நியமனமாகி, சித்தர் இலக்கியம் பற்றி மூன்று ஆய்வு நூல்கள் எழுதி வெளியிடும் பணி அவரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. சோமு இப்பணியைச் செவ்வனே செய்து முடிப்பார் என்பது ஒரு புறம் இருக்கட்டும்; சரியான நபரைத் தேடிப் பிடித்துப் பொருத்தமான பணியை ஒப்படைத்த அண்ணாமலை பல்கலைக் கழகத்தையும் அதன் இணை வேந்தர் திரு எம்.ஏ.எம். ராமசாமியையும் அல்லவா முன்னதாகப் பாராட்ட வேண்டும்!

* அகிலா ராகவன், செம்பூர்.

? திருவாரூர் திருப்பணி எப்படி நடக்கிறது?

! செவ்வனே. திருவையாறு போல இங்கும் சங்கீதாஞ்சலி நடக்க வேண்டும் என்ற காஞ்சி முனிவரின் விருப்பம் இம்மாதம் அமர்க்களமாக நிறைவேறும். 22ந் தேதி முதல் 28ம் தேதி வரை மிகப் பிரபலமான பாடகர்கள் பலர் சங்கீத யக்ஞம் நடத்துகிறார்கள், முத்துசாமி தீட்சிதர் மண்டபத்திலே. மற்றும் தியாகராஜர், சியாமா சாஸ்திரிகள் இல்லங்களைச் செப்பனிட்டுப் புதுப்பிக்கும் பணியும் ஜாம் ஜாம் என்று நடக்கிறது. இதற்குப் பொருளீட்டும் முகமாக உங்கள் ஊருக்கும் பிரபல கலைஞர்கள் வருகிறார்கள். பம்பாய் ஷண்முகானந்தா கலையரங்கில் செம்மங்குடி — லால்குடி — ராமபத்திரன் கச்சேரி 13ந் தேதி. மறு நாள் மாண்டலின் ஸ்ரீனிவாஸ் — ஜி. ஜே. ஆர். கிருஷ்ணன் — ரமேஷ் — விநாயகராம். 15ம் தேதி லால்குடி — அம்ஜத் அலிகான் ஜுகல் பந்தி. பம்பாய் வாசிகளுக்குப் புத்தாண்டு பரவசக் குதூகலமாகத் தொடங்குகிறது. கச்சேரி கேட்ட ஆனந்தம்; நல்ல காரியத்துக்கு உதவிய திருப்தி. நீங்களும் போவீர்கள் அல்லவா! பிடியுங்கள் என் பொறுமையை!

* ரூ 10 பரிசு பெறுபவர்:
வி. ரவிகுமார்,
8, சின்ன செட்டித் தெரு,
லால்குடி—621 601.





... கூறுவோர்!

**நீங்கள் கேட்டவை — தராசு**

# சச்சரவுகள் தீருமா?




# எதிர்காலம் இவர்களுடையது...

**மூர்த்தி** மருத்துவக் கம்பெனியில் வேலை. பழைய படங்களின் பரம ரசிகர். பராசக்தி, உத்தமபுத்திரன், கொஞ்சும் சலங்கை, அன்பே வா போன்ற பல பழைய பட காஸட்களை விடியோவில் திரும்பத் திரும்பப் போட்டுப் பார்த்து மகிழ்வார்.

**முருகதாஸ்** அறுவை ஜோக் அடிப்பது இவர் ஸ்பெஷாலிட்டி. உதாரணத்துக்கு ஒன்று: "திருவொற்றியூருக்கும் 799—க்கும் என்ன ஒற்றுமை?"

"இரண்டுக்கும் அ டு த் த து எண்ணூறு(ர்)."

**சுகுமார்** எலக்டிரிகல் இஞ்சினீரிங் படித்தாலும், ஆட்டோ மொபைல் துறையில் அதிக ஈடுபாடு. இரண்டு வாரங்களுக்கு ஒரு தடவை, தன் ஸ்கூட்டரை அக்கு அக்காகப் பிரித்து, மறுபடி அசெம்பிள் பண்ணுவது வழக்கம்.

**ரமேஷ்** இளம் வக்கீல். அவ்வப்போது, ஏழைகளுக்கு இலவசமாய்ச் சட்ட ஆலோசனை வழங்கி வருபவர். இதை இன்னும் பெரிய அளவில் செய்ய வேண்டும் என்பது லட்சியம்.

**சிவகுமார்** இஞ்சினீரிங் படிப்பவர். பிடித்த சப்ஜெக்ட் எலெக்டிரானிக்ஸ். காலிங்பெல்; நைட் லாம்ப் போன்றவற்றைப் புதுப் புது டிசைனில் அமைப்பது இவருக்குப் பொழுது போக்கு.

**காயத்ரி** மீனாட்சி கல்லூரி மாணவி. க்விஸ் நிகழ்ச்சிகளில் ரொம்ப ஈடுபாடு. டீ.வி. யிலும், ரேடியோவிலும் க்விஸ் நிகழ்ச்சிகளைப் பார்த்து, கேட்பதோடில்லாமல், புதிய கேள்விகளையும்; பதில்களையும் டைரியில் குறித்து வைத்துக் கொள்வார்.

**சுதா** மீனாட்சிக் கல்லூரியில் படிப்பு. பாட்மின்டன் ஆடுவார். மாவட்ட அளவில் ஆடி பரிசுகள் வாங்கியிருக்கிறார். கிரிக்கெட்டிற்குத் தரப்படும் முக்கியத்துவம் மற்ற விளையாட்டுகளுக்குத் தரப்படுவதில்லையே என்பது இவர் வருத்தம்.

**ராதிகா** நிறைய புத்தகங்கள் படிப்பார் இந்த எத்திராஜ் கல்லூரி மாணவி. இந்த இளைஞர் ஆண்டிலாவது, விவேகானந்தரின் புத்தகங்கள், அவரைப் பற்றிய புத்தகங்கள் நிறையப் படிக்க வேண்டும் என்று ஆசைப்படுவதாய்ச் சொல்கிறார்.

**உஷா** எத்திராஜில் முதல் வருடம் படிக்கிறார். தனி நடிப்பு, பேச்சுப் போட்டிகளில் கலந்து கொண்டு, பரிசுகள் வாங்கியிருக்கிறார். ஆட்டோகிராஃப் வாங்குவது ஹாபி. இவருக்கு ஆட்டோகிராஃப் போட்டுத் தந்தவர்களின் மினி லிஸ்ட்: விஞ்ஞானி சந்திரசேகர், அன்னை தெரசா, ராகேஷ் சர்மா, கவாஸ்கர், கபில்தேவ், சிவா, வெங் சர்க்கார்...

**அருணா** ஸ்டெல்லா மாரிஸில் படிக்கிறார். பெயின்டிங்கில் ஆர்வம். சினேகிதிகளுக்குப் பிறந்த நாளின் போது, தாமே தயாரித்த அழகான வாழ்த்து அட்டைகளை அனுப்புவார்.

**பத்மா** எத்திராஜ் காலேஜ் ஸ்டூடண்ட். இளைஞர் ஆண்டை ஒட்டி, ரயிலில் இளைஞர் குழுக்களுக்குச் சலுகை தரப்பட்டுள்ளதைப் பயன்படுத்தி, எப்படியும் நிறைய இடங்களைப் பார்த்துவிட வேண்டுமென்று முடிவு செய்திருக்கிறார்.

தொகுப்பு: **ஜூலி.**
வண்ணப்படம்: **யோகா.**



**அட்டைப்பட இளைஞர்கள்**

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு**

**ராஜ்மோகன் காந்தி**

(1)



அவருக்கு ஐம்பத்தெட்டு வயது. ஐந்தடி ஐந்தங்குல உயரம். கழுகு மூக்கின் மேல் கண்ணாடி. அந்தக் கண்கள் — நீங்கள் அவற்றைப் பார்க்க முடிந்திருந்தால் — தீர்க்கமாக, கிட்டத்தட்ட சோகமாக இருந்ததைக் கண்டிருப்பீர்கள். ஆனால் அவர் அணிந்திருந்த கறுப்புக் கண்ணாடி எந்தவித ஆராய்ச்சியையும் அனுமதிக்கவில்லை. அவர் சிரித்த நேரம் தவிர பிற நேரங்களில் முகம் திண்மையாக, கடுமையாகக் காணப்பட்டது. இந்தப் 'பனிச்' சென்ற சிரிப்பை அடிக்கடி தம் முகத்தில் தவழ அனுமதித்தார் அவர். மனைவியை இழந்த இந்த ஐயங்கார் பிராமணர் ஒவ்வொரு நாளும் ஒரே மாதிரி உடையே அணிந்திருந்தார் — உள் அங்கி, ஜிப்பா, வேஷ்டி, மேல் துண்டு — எல்லாம் புரட்சிக்கும், சீர்திருத்தத்துக்கும் சின்னமாய் விளங்கிய தூய வெள்ளைக் கதரில். நல்ல வருவாய் தந்த வக்கீல் தொழிலை உதறி விட்டு 1919—ல் இவர் காந்தியுடன் இணை சேர்ந்த போது, மூன்று பிள்ளைகளையும், இரண்டு பெண்களையும் அளித்த மனைவி மங்கா தன் இருபத்தாறாம் வயதில் இறந்து போய் நான்கு வருடங்கள் ஆகியிருந்தன. அதன் பிறகு நடந்த கிட்டத்தட்ட இருபது வருட சுதந்திரப் போராட்டம் அவருக்கு நான்கு முறை சிறைவாசத்தைப் பெற்றுத்தந்ததோடு, வேகமான, தீவிரமான, சிந்தனை உடையவர் என்ற பெயரையும் பெற்றுத் தந்திருந்தது. அதோடு, எந்த ஒரு பிரச்னையிலும் அவர் எப்படி யோசிப்பார், எப்படி நடந்து கொள்வார் என்பதை அனுமானிக்கவே முடியாது என்ற கருத்தும் பரவியிருந்தது. இப்போது ஜூலை 1937— இல் சென்னை ராஜதானியின் பிரதம மந்திரியாக அவர் இருந்தார். அரபிக் கடல் பகுதியில் மங்களூர், கோழிக்கோடு வரையும் வங்காள விரிகுடா புறத்தில் விசாகப் பட்டினம் வரையும் விரிந்திருந்த அந்த சாம்ராஜ்யத்தின் 'முடிசூடா மன்னன்' என்று அவரைச் சொல்லிவிட முடியாது. அவரை இப் பொறுப்பில் அமர்த்திய 1935—ம் வருடத்திய கவர்ன்மெண்ட் ஆஃப் இந்தியா சட்டம் பல முக்கிய அதிகாரங்களை (உதாரணம்: ஹைகோர்ட் நீதிபதிகளை நியமித்தல்) பிரிட்டிஷ் கவர்னரிடமே ஒப்படைத்திருந்தது.

இருப்பினும் வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு அவர் அன்று வகித்த பதவி ஒரு நூற்றாண்டுக்கும் மேலாய் இந்தியர் எவரும் பெற்றிராத அதிகாரத்தைப் பெற்றுத் தந்திருந்தது. ஒரு புதிய சகாப்தம் ஆரம்பமாகியிருந்தது. ஸி. ஆரும் அவர் மந்திரிகளும் கடன் வாங்கி, வரி விதித்து, சிறை செய்து, விடுவித்து, வேலையில் அமர்த்தி, வேலை நீக்கம் செய்யும் அதிகாரங்களைப் பெற்றிருந்தனர். தலைமை போலீஸ் அதிகாரி இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸர் சார்லஸ் கன்னிங்ஹாம் தம் காவல் படையினரால் முன்னர் பலமுறை கைது செய்யப்பட்ட வரை இன்று ராஜதானியின் பிரதம மந்திரி என்ற முறையில் சந்திக்க வரவேற்பு அறையில் வெகு நேரம் காத்திருக்க நேர்ந்ததென்று புனித ஜார்ஜ் கோட்டைக்கு வெளியே கல்வியறிவில்லாத மக்களிடம் டவாலி சேவகர்கள் கதை பரப்பிக் கொண்டிருந்தனர்.

பதவியின் பெருமை ஸி. ஆரைச் சூழ்ந்து கொண்டிருந்தாலும் அவரும் அவர் சகாக்க

# பிரதம மந்திரி பிறப்பித்த முதல் ஆணை

னும் ஆங்கில ஆட்சி நிர்ணயித்த சம்பளத்துக்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். வருடத்திற்கு ரூ. 56,000 என்று முதல்வருக்கு நிர்ணயிக்கப்பட்ட தொகை, வீட்டு வாடகை, போக்குவரத்து செலவு உள்பட ரூ. 9,000 மட்டுமே என்று மாற்றி அமைக்கப்பட்டது. அரசு, மந்திரிகளுக்கு வீடு அளிக்கவில்லை. ஆனால் ரூ. 3000—க்கு வாங்கப்பட்ட காரை உபயோகத்துக்கு அளித்தது. ஸி. ஆரும் அவர் சகாக்களும் பதவியேற்ற முதல் மாதத்தில் பழைய (அதிகப்படி) சம்பளம் மாற்றப்படவில்லை. ஸி. ஆர். ஒவ்வொரு மந்திரியிடமும் அதிகப்படி பணத்தைத் திருப்பித் தந்துவிடுவதாக வாக்கு மூலம் பெற்றுவிட உத்தரவு பிறப்பித்தார். மந்திரிகளோ, அவர்களின் சந்ததிகளோ இப்பணத்தைப் பிற்காலத்தில் கேட்கக் கூடாது என்பதற்கே இந்த முன்னேற்பாடு..

அரசுச் செலவினங்களில் அவர் காட்டிய சிக்கனம் கவர்னர் எர்ஸ்கைன் பிரபுவின் அபிப்ராயத்தில் கஞ்சத்தனம் என்பதாக வர்ணிக்கப்பட்டது. சகாக்களிடம் எதிர்பார்த்த கடுமையான கட்டுப்பாடு, 'சர்வாதிகாரி' 'பள்ளிக்கூட வாத்தியார்,' என்ற ''பட்டங்''களைப் பெற்றுத் தந்தது. ''தனி மனிதர் மந்திரிசபை'' என்று அமைச்சரவை பரிகாசத்துக்குள்ளாயிற்று. ஆனால் ஸி. ஆர். இதையெல்லாம் லட்சியம் பண்ணவேயில்லை. இப்பண்புகளே இவர் ஆட்சியில் உறுதியாகக் கடைப்பிடிக்கப்பட்டன.

ஸி. ஆர். தம் முதல் ஆணையாக சிறைக் கைதிகளுக்கு மோர் வழங்க வேண்டும் என்று அறிவித்த போது, ஆயிரக்கணக்கான சுதந்திரப் போராட்ட வீரர்கள் தாங்கள் சிறையில் பெற்ற அரைகுறை உணவை நினைவில் கொண்டு இந்த உத்தரவை வரவேற்றனர். என்றாலும் ஆங்கிலேய ஆட்சியாளர்கள் இதை ஒரு பெரிய விஷயமாகவே எண்ணவில்லை. ஆனால் அடுத்தாற்போல் வன்முறையில் ஈடுபட்டதற்காக சிறையிடப்பட்டு இப்போது வன்முறையைத் துறப்பதாக உறுதி அளித்த பல விடுதலைப் போராட்டக் கைதிகளை ஸி. ஆர். விடுதலை செய்த போது ஆங்கிலேய அதிகார வர்க்கம் நிமிர்ந்து உட்கார்ந்தது. அதைத் தடுக்கவும் முயன்றது. வைஸ்ராய், கவர்னரிடம் தம் விருப்பமின்மையைத் தெரிவித்தார். ஆனால் ஸி. ஆர். விட்டுக் கொடுத்துப் பணியவில்லை. உறுதியாயிருந்து தம் முயற்சியில் வெற்றி கண்டார். 38 அரசியல் கைதிகள் விடுதலை பெற்றனர்.

இது போன்ற சில மோதல்கள் அவ்வப்போது இருந்த போதிலும் பொதுவாக ஸி. ஆரும் பிரிட்டிஷ் அரசின் பிரதிநிதிகளும் ஒன்றுபட்டே இயங்கினர். ஸி. ஆர். பதவியேற்று மூன்றே வாரங்களில் இது விஷயமாக கவர்னர் எர்ஸ்கைன் பிரபுவுக்கு வைஸ்ராய் கடிதம் எழுதினார்:

''உமக்கும் ராஜகோபாலச்சாரிக்கும் இடையே நிலவும் நல்லுறவு எனக்கு ஊக்கம் அளிக்கிறது''

இந்தக் கணிப்பு ஸி. ஆரின் ஆட்சிக் காலம் முழுவதற்குமே பொருந்துவதாய் இருந்தது. ராஜாஜி இந்த நல்லுறவுக்குத் தம் முதல் மேடைப் பேச்சிலேயே வித்திட்டிருந்தார். அதிகாரிகளை ''நிரந்தர பொதுத் தொண்டில் ஈடுபட்டுள்ள என் சகாக்கள்'' என்று இவ் உரையில் அவர் குறிப்பிட்டிருந்தார்:

''கடந்த காலத்தில் எனக்கு ஏற்பட்ட துன்பத்துக்காக ஒரு குறிப்பிட்ட குழுவிடமோ, வர்க்கத்திடமோ நான் கோபமும் வெறுப்பும் எதிர்ப்புணர்வும் கொண்டால் இந் நாட்டின் உயரிய பண்பாட்டை மறந்தவனாவேன்; என் கொள்கையை உண்மையாய்க் கடை பிடிக்கத் தவறியவனாவேன்''

என்றும் அவர் அவ்வுரையில் கூறினார்.

அன்று பிரபலமாயிருந்த தேசத் தலைவர்களுள் இந்த ரீதியில் பேசியவர் ராஜாஜி மட்டுமே. அவர் பேச்சு, அரசியல் மாற்றங்களைக் குறித்து கவலைப்பட்டு அவற்றைக் குலைக்கவும் தயாராய் இருந்த ஆங்கிலேய அரசாங்க அதிகாரிகளை சமாதானப்படுத்தியதோடு அவர்கள் ஒத்துழைப்பையும் பெற்றுத் தந்தது. 'பிரிட்டிஷ் வல்லரசை மயக்கிய மகுடி நான்' என்று பெருமைப்பட்டுக்கொண்டார் ஸி. ஆர். தலைமைச் செயலர் ஸர் சார்ல்ஸ் பிராக்கன்பரியுடன் ஸி. ஆர். நன்றாக ஒத்துப் போனார். ஸி. ஆரின் நல்லெண்ணத்தை பிராக்கன்பரியும் எதிரொலிப்பதாக வைஸ்ராய் லின்லித்கோவிடம் கூறினார் கவர்னர். பொதுத் துறை கீழ்ச் செயலர் ஜே. பி. எல். மன்றோவிடமும் இது போன்ற நல்லுறவு கொண்டிருந்தார் ஸி. ஆர். அப்போது 32 வயதே நிரம்பிய மன்றோ பின்னர் நினைவு கூர்ந்தார்:

''எல்லாம் சரியாக நடந்துகொண்டிருந்தது — ஐ. ஸி. எஸ்ஸை எதிர்த்து ஒரு அமைச்சர் ஆற்றிய உரையை நான் படிக்கும் வரை. அதி கோபமாய் ஒரு சிறு மடல் எழுதினேன் பிரதம மந்திரிக்கு.' அவர் என்னை கூப்பிட்டு அனுப்பினார். நான் மந்திரி செய்த தவறைச் சுட்டிக் காட்டியது சரி என்றாலும் அதே மந்திரி நாளை வேறு விதமாய் பேசி நிலைமையைச் சரி கட்ட கூடும் என்றார். (அன்று மாலையே அவர் சொன்னபடி நடந்தது). ''சில சமயம் இப்படித்தான் உள்ளக் குமுறல் வெடிக்கும் — நீராவி குமுறும் எக்ஸ்பிரஸ் ரயில், ஸ்டேஷனில் நிற்காமல் போய் விடுவது போல பேசி விடுவார்கள்... அடுத்த தடவை உனக்கு எரிச்சல் ஏற்பட்டால் ஜில்லென்று பச்சைத் தண்ணீரில் குளி! என்று ஸி. ஆர். சிரித்தபடி தொடர்ந்து சொன்னார்.''

(தொடரும்)

தமிழாக்கம் ஜதாரவி.



# வானதி வழங்கும் கல்கியின் நூல்கள்



வானதி என்ற அற்புதமானதொரு கதா நாயகியைப் படைத்து தமிழ் வாசகர்களின் நெஞ்சில் இலக்கிய மணம் பரப்பும் பூக்களைப் பொழிந்து கொண்டிருப்பவரும், தமது அழியாத இலக்கியப் படைப்புக்களால் இன்றும் நம்மிடையே வாழ்பவருமான வணக்கத்துக்கும் பெருமதிப்பிற்குமுரிய பேராசிரியர் கல்கி அவர்களின் அற்புதப் படைப்பான பொன்னியின் செல்வன் நாவலை வானதி பதிப்பகத்தில் வெளியிடும் பாக்கியத்தை அருளிய இறைவனை வணங்குகிறேன்.

அமரர் கல்கியின் படைப்புக்கள் என்றும் அழியாத மகோன்னதச் செல்வங்கள். இந்த அரும்பெரும் செல்வங்களை நூல் வடிவில் தமிழ் மக்களுக்கு அளிக்கும் வாய்ப்பை, அன்புடன் வழங்கிய கல்கியின் புதல்வர் திரு.கி. ராஜேந்திரன் அவர்களுக்கும் சீதாலக்ஷ்மி பதிப்பக உரிமையாளர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றி.

பொன்னியின் செல்வன் ஐந்து பாகங்களைக் கொண்டது. மொத்தம் 2300 பக்கங்களுக்கும் மேற்பட்டது. பிரமிக்க வைப்பது அதன் பக்கங்கள் மட்டுமல்ல, இலக்கிய ஆழமும், வீச்சும் தான். பொன்னியின் ஆடிப் பெருக்கைப் போல் கற்பனைப் புனலாக, வண்ணத் தமிழ் வெள்ளமாகக் கரை புரண்டு ஓடுகிறது வரலாற்றுக் கதை. அது வாசகர்களை எப்படி கவருகிறது என்பதற்கு எடுத்துக் காட்டாக ஒரு பாடல்:

''பொன்னியின் செல்வனும்
பூங்குழலி அம்மையும்
வந்தியத் தேவனும்
வானதியும் குந்தவையும்
பழுவூர் நந்தினியும்
பழுவேட்டரையர்களும்
பாடாய் படுத்துகின்றார் — நாங்கள்
பாகாய் உருகுகின்றோம்''

இந்தப் பாடல் பொன்னியின் செல்வன் தொடராய் வந்து கொண்டிருக்கையில் விழுப்புரத்தில் உள்ள மகாத்மா காந்தி பாடசாலையில் கல்கிக்கு அளித்த வரவேற்பு மடலில் உள்ளது. இதனை ''பொன்னியின் புதல்வர்'' என்ற கல்கியின் வரலாற்று நூலில் ஆசிரியர் சுந்தா குறிப்பிட்டுள்ளார். இதைப் போலவே அந்தப் பெருங்கதையில் உலவும் மாந்தருடன் மனம் ஒன்றிய தமிழ் மக்கள் எத்தனையோ பேர் பாராட்டினர். இன்றும் பாராட்டிக்கொண்டிருக்கின்றனர். எப்பொழுதும் பாராட்டுவர்.

பொன்னியின் செல்வனின் இதயம் கவர்ந்த நாயகி வானதியின் பெயரையே, இந்தப் பதிப்பகத்துக்குச் சூட்டி மகிழ்ந்ததோடு அதன் மூலம் அமரர் கல்கி அவர்களுக்கு எனது மரியாதையையும் தெரிவித்துக் கொண்டவன் நான்.

எனவே தமிழ் மக்களின் மகத்தான பாராட்டைப் பெற்ற, பெற்றுக்கொண்டிருக்கிற மாபெரும் வரலாற்று நவீனமாகிய பொன்னியின் செல்வனை அழகிய புத்தக வடிவில் தமிழ் வாசகர்களுக்கு வழங்குவதில் வானதி அளப்பரிய பெருமை கொள்கிறது.

அதுமட்டுமின்றி, ஏற்கனவே கல்கியின் சமூக நாவல்கள், சிறுகதைகள், பலவற்றையும், பிரசுரித்து வந்த வானதி இப்போது கல்கியின் சரித்திர நாவல்களையும் பிரசுரிக்கும் வாய்ப்புப் பெற்றுள்ளது. பெரு மகிழ்வுடன் பேராசிரியர் கல்கியின் அனைத்தும் படைப்புக்களையும் பக்தியோடு புத்தக வடிவில் வழங்குகிறது.

**வானதி திருநாவுக்கரசு.**

வானதி பதிப்பகம்,
சென்னை—17. (போன் 442810)



# புதிய தலைமைச் செயலரின் மனைவி பேசுகிறார்:

திருமதி மாலிக்கு ஒரு பழக்கம் உண்டு. ஏதாவது காரியம் நிறைவேற வேண்டுமென்றால் விரதம் இருப்பாராம். சில சமயங்களில் பையன்கள், ''அம்மா நாளைக்கு பரீட்சை. எனக்காக விரதம் இரும்மா'' என்று கேட்டுக் கொள்வதுண்டாம். அமெரிக்காவில் இருக்கும் பையனிடமிருந்து கூட இப்படி விரதத்திற்கான வேண்டுகோள்கள் வரும். ''நான் விரதமிருக்கும் விஷயங்களில் 90 சதவீதம் வெற்றி தான்'' என்கிறார் திருமதி மாலி.

'அப்படியானால் கணவருக்குத் தலைமைச் செயலர் பதவி கிட்டவும் விரதமிருந்தீர்களா?' என்று கேட்கத் தோன்றும் நமக்கு. ''இல்லை'' என்கிறார் மாலி.

''அவர் எதையுமே எதிர்பார்த்துக் கொண்டிருப்பதில்லை. அது போலத் தான் இந்தப் புதிய பதவியையும் நாங்கள் எதிர்பார்க்கவில்லை. 'நமக்கு வருவது தானாக வரும்' என்பதில் நம்பிக்கை கொண்டுள்ளவர் என் கணவர். இந்த மனப்பான்மை காரணமாக ஏமாற்றங்களோ, கவலைகளோ எங்களை வந்து பற்றிக் கொள்வதில்லை. எந்தப் பொறுப்பில் இருந்தாலும் சமுதாயத்தில் நலிந்த பிரிவினருக்கு என்ன செய்ய முடியும் என்பதே அவரது எண்ணமாக இருந்து வருகிறது.''

போயஸ் கார்டனில் 62ம் நம்பர் வீடு. மிகவும் அமைதியாகக் காட்சி தருகிறது. வரவேற்பறையில் நடராஜர் சிலை, தசாவதாரம் பெயிண்டிங், ஏசு கிறிஸ்து படம், புத்தரின் திரு உருவம்.

தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் தொலை பேசி வாழ்த்துக்களுக்கு இடையில் கல்கி வாசகர்களின் வாழ்த்தையும் ஏற்று நன்றி கூறுகிறார் தலைமை செயலாளர் திரு. டி. வி. அந்தோணியின் மனைவியான திருமதி மாலி (Molly) அந்தோணி.

தலைமை செயலாளரின் கல்யாணம் 1961ம் ஆண்டு நடந்தது. திருமதி மாலிக்குச் சொந்த ஊர் திருச்சூருக்கு அருகில் உள்ள சாலக்குடி என்னும் கிராமம். அந்தோணி அவர்களது ஊரும் அங்கிருந்து அருகாமையில் தான் இருக்கிறதாம். தமிழில் கடகடவென்று திருமதி மாலி பேசினாலும், இடையிடையே மலையாளத்தின் வாசனை அடிக்கிறது. தலைமைச் செயலாளருக்கு இரண்டு பையன்கள். ஒருவர் அமெரிக்கா வெயின்ஸ்டேட் பல்கலைகழகத்தில் பொருளாதாரத்தில் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார். மற்றொருவர் டான் பாஸ்கோவில் படித்துக் கொண்டிருக்கிறார்.

கணவர் சதா ஆபீஸ் வேலை என்று பிஸியாக இருப்பதால் திருமதி மாலிக்கு நிறைய நேரம் கிடைக்கிறது. சமையல் கலை, அழகுக் கலை, ஓட்டல் நிர்வாகம் என்று பல்வேறு விஷயங்களைப் படித்து டிப்ளமா, சர்ட்டிபிகேட் என்று நிறைய வாங்கி மாட்டி வைத்திருக்கிறார். வீட்டில் பெண்களுக்கென ஓர் அழகு நிலையத்தையும் நடத்திக் கொண்டிருக்கிறார்!

ஒவ்வொரு செவ்வாய் கிழமையும் டவுனிலுள்ள புனித அந்தோணியார் கோவிலுக்குச் செல்லுவது வழக்கம். வரும் போது, கொத்தவால் சாவடிக்குச் சென்று ஒரு வாரத்திற்கு வேண்டிய காய்கறிகளை வாங்கிக் கொண்டு வருவார்களாம். கையில் பையெடுத்துக் கொண்டு கடை கடையாகச் சென்று விலை விசாரித்து வாங்குவது என்பது தலைமை செயலாளருக்குப் பிடித்த விஷயமாம்!

தலைமைச் செயலாளர் தூங்குவதற்கு மிகவும் லேட்டாகுமாம். ''முன்பெல்லாம் ஆங்கில நாவல்கள் படித்துக்கொண்டிருப்பார். ஆனால் இப்போது ஆபீஸ் பைல்களே நேரத்தை பிடித்துக் கொள்கின்றன.''

காலையில் 6 மணிக்கு சைக்கிளில் ஒரு ரவுண்டு அடித்து விட்டு வருவாராம் திரு அந்தோணி. உடற்பயிற்சிக்காக மட்டுமல்ல. சுற்றியிருக்கும் சேரிகளுக்குச் சென்று, குடும்பக் கட்டுபாட்டின் அவசியத்தையும், சுகாதாரமாக இடத்தை வைத்துக் கொள்ள வேண்டியதன் அவசியத்தையும் விளக்கி விட்டு வருவாராம். பின்னர் தோட்ட வேலை.

''முன்னால் உள்ள புல்வெளி அவரால் தான் உருவாக்கப்பட்டது'' என்று பெருமையாகச் சொல்கிறார் திருமதி மாலி.



''ஒவ்வொரு வீட்டிலும் ஒரு முருங்கை மரமும், பப்பாளி மரமும் இருப்பது மிகவும் அவசியம்'' என்று சொல்வாராம் திரு அந்தோணி. இப்போதும் பிளாஸ்டிக் பைகளில், மண்ணை நிரப்பி முருங்கைக் கன்றுகளை வைத்து இருக்கிறார்கள். தன்னைப் பார்க்க வரும் நண்பர்கள், அரசாங்கத்தில் பணியாற்றும் ஊழியர்கள், ஆகியோருக்கு ஒவ்வொரு முருங்கைக் கன்று கொடுக்கிறார் திரு. அந்தோணி.

கணவர் மிகவும் பிஸியாக இருப்பதால், அவருக்குத் துணி தேர்ந்தெடுப்பது கூட திருமதி மாலி தான். ''டார்க்''காக எதுவுமே போடமாட்டார். கோழி, மீன் என்றால் விரும்பிச் சாப்பிடுவார். ஆனால் மதியம் நான் கொடுத்து அனுப்பிய சாப்பாடு என்ன என்று கேட்டால் சொல்வதற்குச் சற்றுத் திண்டாடுவார். அந்த அளவிற்கு ஆபீஸ் வேலை!'' என்கிறார்.

பேட்டி : ப்ரியன்.

படம்: ரவிசங்கர் (கூபா)

# விரதமிருந்தால் வெற்றிதான்



# ஸோனியா



1960—ல், ஆக்ஸ்ஃபோர்ட் சூழலில் தான் ஸோனியா — ராஜீவ் காதல் துவங்கியது. (இல்லை கேம்பிரிட்ஜ் தான் என்று சொல்வோரும் உண்டு.) இடையில் சிறிது காலம் ஸோனியா இதாலிக்குப் போய் இருந்தார்; ராஜீவ் இந்தியாவிற்கு வந்துவிட்டார். ஒருவரை ஒருவர் பிரிந்திருக்க முடியாத நிலை எப்போது உருவாயிற்றோ, அப்போது திருமணம் நடந்தது. (ஜனவரி 68—ல் நிச்சய தார்த்தம்; பிப்ரவரியில் திருமணம்.)

ஸோனியா — முதல் குழந்தையை இழந்த போது, ஸோனியாவைவிட அதிகம் வருந்தியவர் ராஜீவ்தான். ப்ரியங்க்காவும், ராகுலும் 71—லும், 73—லும் பிறந்தார்கள்.

ஸோனியாவின் முழுப்பெயர்ஸோனியா மெய்னோ. இதாலி நாட்டு டூரின் நகரத்தைச் சேர்ந்தவர்.

ஸோனியாவின் உலகம் ரொம்பச் சின்னது. கணவர் ராஜீவ்; மகள் ப்ரியங்க்கா; மகன் ராகுல் — இவர்களைச் சுற்றித்தான் இவர் வாழ்க்கை இயங்குகிறது. தன் குடும்பத்தையும், கணவரையும் இந்த அளவுக்கு நேசிக்கிற இன்னொரு பெண்மணியைப் பார்ப்பது கஷ்டம். இப்போதும், வீட்டில் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொள்ளும் போது இருவர் முகத்திலும் உண்டாகிற மகிழ்ச்சியான மலர்ச்சி...

ஸோனியாவுக்குக் குடும்பம்தான் உலகம் என்றால், சமையலறை ஒரு முக்கியமான பகுதி. தானே சமைப்பதில் ஒரு ஆர்வம். காஷ்மீரிப் பாணி சமையலில் கெட்டிக்காரர். அதற்காக இதாலிய உணவுவகைகளை மறந்துவிட்டவரல்ல. உல்லாசமாக இருக்கிறபோது, பிரமாதமாகச் சமைத்திருக்கும் பொருள்களை எடுத்துக் கொண்டு நண்பர்கள் வீட்டுக்குப் போய்ப் பகிர்ந்து கொள்வது பிடித்தமான பொழுது போக்கு.

81—ல் தேர்தலில் ராஜீவ் போட்டியிட்ட போது, நிழல் மாதிரி கூடவே சென்று வழியெங்கும் மக்களைச் சந்தித்து, மருந்துகளும், பண உதவியும், பரிசுப் பொருளும் கொடுத்து, இதாலிய ஓசை கொண்ட தமது ஹிந்தியில் பேசி எல்லோரையும் கவர்ந்தார். 84—லிலும் அதேவழி; அதே பாணி. ராஜீவின் தேர்தல் வெற்றிக்கு முக்கிய காரணம் மனைவி ஸோனியாவும்தான்...

ஸோனியா அதிகம் வெளியே தலை காட்டாதவர். தேர்தலின் போதும், பிறகு பிரதமரின் மனைவி என்ற அந்தஸ்துக்குப் பிறகும் தான் பொது நிகழ்ச்சிகளுக்கு (நிர்ப்பந்தம் காரணமாக) வர ஆரம்பித்தார். முன்னால், கண்களைக் கறுப்புக் கண்ணாடி மறைக்கும்; இப்போது இல்லை. பேட்டிகள் கொடுப்பது? ஊஹூம், பிடிக்கவே பிடிக்காது.

பிரதமரின் மனைவி என்ற ஹோதாவில் சில பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வது தவிர்க்க முடியாதது. அதனால் அவரது அலுவலகத்தில், இவருக்கு உதவ, ராஜேசுவரி டாண்டன் என்கிற பெண்மணி சோஷியல் செக்ரடரியாகப் பணியாற்றுகிறார். (வருகிற கடிதங்கள் ஏராளம். அவற்றுக்குப் பதில் அனுப்ப வேண்டியிருக்கிறதாம்.)

காரியங்களைக் கச்சிதமாகச் செய்வதில் மாமியார் இந்திரா காந்தியின் பயிற்சி பளிச்சென்று தெரியும். இந்த ஆண்டு ஜவஹர்லால் நேரு விருது கொடுத்த போது, நேரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், அத்தனை பேரையும் குறித்து வைத்துக் கொண்டு டெலிபோனிலேயே அழைத்தவர் ஸோனியா. ஒரு சின்ன விஷயமானாலும் இவர் கண்ணுக்குத் தப்பாமல் போகாது. ஞாபக சக்தி — ஏ ஒன். இன்னாருக்கு இன்னது அனுப்ப வேண்டும் என்பது முதல், இத்தனை வருஷங்களுக்கு முன் இன்னார் விருந்தாளியாக வந்தபோது, இன்ன விருந்து பரிமாறினோம் என்பதுகூட நினைவிருக்கும்!

ரஷ்யன், பிரெஞ்ச், போர்ச்சுகீஸ், ஸ்பானிஷ், ஆங்கிலம், இதாலி, இந்தி (அடேயப்பா!) அத்தனை மொழிகளும் அத்துபடி.

கலைகளில் அதீத ஈடுபாடு. நாஷனல் காலரி ஆஃப் மாடர்ன் ஆர்ட்டில், பழங்கால ஓவியங்களைப் புதுப்பிப்பது பற்றிக் கற்றிருக்கிறார். இசை—குறிப்பாக ஓபரா எனும் நாட்டிய நாடகங்களிலே ஈடுபாடு அதிகம். இப்போது—

புதுதில்லியில் ரேஸ் கோர்ஸ் சாலையில் உள்ள புதுவீட்டில் குடியேறிவிட்ட பிறகு, புது வீட்டின் அலங்கரிப்பு — பராமரிப்பு விஷயத்தில் பிஸியாக இருக்கிறார் ஸோனியா.

தொகுப்பு : சித்தார்த்.

# முத்துலிங்கத்தின் சத்தான பதில்



# 'இன்குலாப்பின் அறியாமைக்கு இரங்குகிறேன்'

"ராஜராஜன் கடாரம் கொண்டான், சாவகம் வென்றான்" இதுவா ஒரு மன்னனுக்குச் சிறப்பு என்று நண்பர் இன்குலாப் கேட்கிறார். மன்னருக் குரிய சிறப்புக்களில் வீரச் சிறப்பும் ஒன்று. தன் வீரத்தைக் காட்டுவதற்காக அயல் நாட்டின் மீது படையெடுப்பதும், தன்னை எதிர்க்கும் மன்னர்களை அல்லது தன் நாட்டைப் பழிக்கும் மன்னர்களை புற முதுகிட்டு ஓடச் செய்வதும் ராஜ குலத்தின் ரத்தத் தோடு ஊறிய பண்பு.

"குடவோலை முறை மூலம் ஊராட்சித் தேர்தலை நடத்திய ராஜராஜன் குறிப்பிட்ட சொத்துப் படைத் தவர்கள்தான் தேர்தலில் நிற்க வேண்டுமென்று கூறினான். இதுவா ஜனநாயகம்" என்றும் அவர் கேட் கிறார்.

தேர்தலில் நிற்பவனுக்குக் காணி நிலமாவது இருக்க வேண்டும் அல்லது ஒரு வீடு இருக்க வேண் டும் என்று ராஜராஜன் கூறியது சுரண்டலுக்கு இடம் இல்லாமல் இருக்க வேண்டுமென்பதற்காகத்தான். ராஜராஜன் காலம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முற் பட்ட முடியாட்சிக் காலம். அத்தகைய முடியாட்சி இருந்த காலத்திலேயே மக்கள் வாக்களித்துத்தான் ஓர் ஊராட்சித் தலைவனைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று சட்டம் கொண்டு வந்தானென்றால் அன்றிருந்த நிலைக்கு அதுவே மிகப் பெரிய ஜனநாயகச் சிறப்பு என்பதை ஏன் இன்குலாப் மறந்து போனார்? அதைப் போல ஒரு ஜனநாயகச் சட்டத்தை உலகில் எந்த அரசனாவது அந்தக் காலக்கட்டத்தில் கொண்டு வந் தானா?

தேர்தலில் நிற்பவர்களுக்கு என்னென்ன தகுதி வேண்டும் என்பதை இன்னும் தெளிவாக ராஜ ராஜன் கூறுகிறான். கள் குடிப்பவர்கள், பெண்களை மானபங்கம் செய்தவர்கள், திருட்டுக் குற்றம் — கொலை குற்றம் செய்தவர்கள், வரி ஏய்ப்பு செய்பவர் கள், ஏதேனும் ஊர்ப் பஞ்சாயத்தில் அபராதம் கட் டியவர்கள் தேர்தலில் நிற்கக் கூடாது என்றும் சட் டம் செய்திருந்தான்.

தேர்தலில் நிற்பவன் இத்தகைய குற்றம் செய்யா தவனாக இருந்தாலும் அவனது உறவினர்கள் யாரேனும் இக் குற்றத்தைச் செய்திருந்தால் கூட இவன் தேர்தலில் நிற்கக் கூடாது என்று கடுமையான சட்டம் செய்திருந்தான்! எத்தகைய ஒழுக்கமும், கண்ணியமும் நாட்டில் வளர வேண்டும் என்று எண்ணியிருந்தால் ராஜராஜன் இத்தகைய சட்டத்தைக் கொண்டு வந்திருப்பான்?

ஜனநாயகம் பேசிய ஆங்கிலேயர்கள் கூட சொத் துரிமை உடையவர்கள்தான் தேர்தலில் நிற்க முடி யும் என்று 1947 வரை இந்தியாவில் சட்டமாக்கி இருந்தார்கள் என்பதையும் இன்குலாபுக்கு நினை வூட்டுகிறேன்.

"விஞ்ஞானச் சாதனையே இல்லாத போது வியத் தகு கோவிலைக் கட்டினானும், அந்தப் பெரிய கோவி லின் ஒரு கல்லையாவது ராஜராஜன் எடுத்துக் கொடுத்திருப்பானா?" என்று கவிஞர் இன்குலாப் கேட்கும் கேள்வி அவரது அறியாமைக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டு.

நாம் ஒரு வீடு கட்டுகிறோம் என்றால் கொத்தனார் தான் வீடு கட்டுவார். அது யார் வீடு என்றால் இன்னார் கட்டிய வீடு என்றுதான் சொல்வார்களே தவிர கொத்தனார் கட்டிய வீடு என்று யாரும் சொல்வ தில்லை.

அந்தக் கோவிலைக் கட்டுவதற்கு தன் குடும்ப சொத்துக்களைத் தான் ராஜராஜன் கொடுத்தான். ராஜராஜனது அக்காள் குந்தவைப் பிராட்டியார் தான் அதற்கான நிதியுதவியைத் தொடங்கி வைத் தார். யார் யார் பெரிய கோவில் கட்டி முடிக்கப் பொன் பொருள் கொடுத்தார்கள் என்று கல்வெட் டில் எழுதப்பட்டும் இருக்கிறது. இத்தகைய கோவிலைக் கட்டியதால் தான் தமிழ் நாட்டின் பொறி யியற் கலைச் சிறப்பை உலகம் இன்று உணர முடி கிறது. இதை விட ராஜராஜனுக்கு என்ன பெருமை வேண்டும்?

இறுதியில் "ராஜராஜன் மீது எனக்குக் கோப மில்லை. அவன் புகழில் குளிர் காயும் அரசியல்வாதி மீது தான் எனக்குக் கோபம். அதைக் கண்டு கொண்டு என்னால் சும்மா இருக்க முடியாது. தங் களையே ராஜராஜனாக நினைத்துக் கொண்டு மலர்க் கிரீடங்கள் சூடிக் கொள்கிறார்கள்" என்று குற்றம் சாட்டுகிறார்.

பொது மக்கள் அல்லது ஓர் இயக்கத்தைச் சேர்ந் தவர்கள் அன்பின் காரணமாகத் தலைவனுக்கு மலர்க் கிரீடங்கள் சூட்டி மகிழ்கிறார்கள். இதில் இன்குலா புக்கு என்ன வந்தது?

இந்திரா காந்தியையும், கலைஞரையும் கூட அவர் தாக்கி எழுதியிருக்கிறார். வயிற்றில் பிள்ளை இருக் கும் போதே சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறைச் சாலைக்குச் சென்று கொடுமைகளை அனு பவித்தவர் இந்திரா காந்தி. கொண்ட கொள்கைக் காக எத்தனையோ முறை சிறை சென்றவர் கலைஞர் கருணாநிதி. அரசியல் ரீதியாகக் கலைஞரை எதிர்ப் பவர்கள் தான் நாங்கள். ஆனால் அவரது மொழி யுணர்வையோ, இன உணர்வையோ அவரது தியா கத்தையோ யாரும் குறைத்து மதிப்பிட்டதில்லை. இப் படிப்பட்டவர்களைத் தாக்கி எழுதுவதற்கும் இன் குலாபுக்கு அருகதை இல்லை; இவரது இக் கவிதை யைப் பாடப் புத்தகத்தில் சேர்த்தவர்களுக்கும் அறி வில்லை.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Frivate Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

... P. S. Mani Editor: K. Rajendran

பற்களின் மீதான
தம்முடைய பிடிமானம்
தளர்ச்சி அடைய
உங்கள் ஈறுகளுக்கு
இடமளிக்காதீர் !

**ஈறுகளை பலப்படுத்துவதற்கான விசேட அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கியிருப்பது ஃபோர்ஹென்ஸ் ஒன்றில்தான். உங்கள் ஈறுகள் உறுதியோடிருக்கும் போது உங்கள் பற்கள் நீடித்த ஆயுளைப் பெறுகின்றன.**

சிறந்த அமெரிக்கப் பல் டாக்டர் ஆர். ஜே. ஃபோர்ஹென், தன்னுடைய டூத் பேஸ்ட்டில் விசேட அஸ்ட்ரிஞ்ஜெண்ட் ஒன்றைச் சேர்த்தார்! அது, ஈறுகளில் நேரடியாக செயல்பட்டு உண்மையிலேயே அவற்றை பலப்படுத்துகிறது. அது, ஈறுகளைப் உறுதிப்படுத்துவதால் பற்கள் சிறந்த பிடிமானத்தைப் பெறுகின்றன. ஆகவே பற்களுக்கு உறுதியான அடித்தளமும் நீடித்த ஆயுளும் கிடைக்கின்றன.




**போர்ஹென்ஸ் – பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்**

339F 203 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# க்ரீம் க்ரஞ்ச் வெளியிடும்







## அந்தரங்கக் கதை

### க்ரீம் க்ரஞ்ச் பிஸ்கட்டுகளை சுவைக்கும் ரகசிய முறை!

1. யாராவது பார்த்து விடப் போகிறார்கள், ஜாக்கிரதை.
2. பாக்கெட்டிலிருந்து ஒன்றை மெதுவாக உருவுங்கள்.
3. அதை இரண்டாகப் பிரியுங்கள்.
4. கிரீமை நக்குங்கள்.
5. கிரீம் தீரும் வரை (4) திரும்பச் செய்யுங்கள்.
6. கரகரப்பான பிஸ்கட்டைக் கடித்துச் சுவையுங்கள்.
7. க்ரீம் துளிகள் எதையும் விட்டு வைக்காதீர்கள்.




வெண்ணெய் கிரீம் ஏலக்காய்

**பேக்மேன்ஸ் க்ரீம் க்ரஞ்ச்**
**கடைசித்துளி வரை உண்மையிலேயே க்ரீம் கொண்டது.**

சில விசேஷ நகரங்களில் மட்டுமே கிடைக்கும்